




காளையார்கோவில் வேதாந்த மடத்தின் குரு முதல்வர்

## ஸ்ரீலஸ்ரீ செல்லப்பஞான தேசிக சுவாமிகள்மீது

சீடர்

இளையான்குடி வேதாந்த மடத்தின் குரு முதல்வர்

ஸ்ரீ சிவானந்த சுவாமிகளால் பாடிய

# சப்த ரசமஞ்சரி



பத்மபந்த வெண்பா

ஞானகன மானமன ஞானவன மோனமுன
ஞானகன பானுநிகர் நற்றவத்தோர்-வானம்நேர்
தந்தைமெச்சு ஞான தவராஜ செல்லப்பர்
சிந்தைமெச்சு நின்ற சிவம்.



அஷ்ட நாக பந்தவெண்பா

யோகா நிதபல யோக வரகுண
பாகா பரவண மாகதபா-ஏக
கனவன மோனக் கதிதருசெல் லப்பா
தனமான ஞானம்நீ தா




ரதபந்தம் கட்டளைக்கலித்துறை

சித்தான பானு சிவஞான வண்ணத்த தேவவசி
வத்தான தத்துவ மாகத் தவவதே மத்வயமா
பொய்த்தான வத்தெலா நீக்குபூ தாதிப பூரணமா
சித்தாப்பல் வாச்சொலத் தானல்ல செல்லப்ப தெய்வமதே





கா. செ. வேதாந்த மடத்தின்

தலைவர்

# ஸ்ரீலஸ்ரீ அருணாசலஞான தேசிக சுவாமிகள்

காளையார்கோவில்




ஸ்ரீலஸ்ரீ செல்லப்பஞான. தேசிகஸ்வாமியவர்கள்
வேதாந்தமடம் · காஜியார் கோவில்

ஸ்ரீ குரு


ஸ்ரீலஸ்ரீ சிவானந்தஸ்வாமியவர்கள்.
வேதாந்தமடம் · இளையாண்குடி.

சீடர்

உ

சிவமயம்

இளையான்குடி வேதாந்த மடத்தின் முதல்வர்

ஸ்ரீ சிவானந்த ஞானதேசிக சுவாமியவர்கள்

காளையார்கோவில் வேதாந்த மடத்தின் குரு முதல்வர்

ஸ்ரீலஸ்ரீ—செல்லப்ப ஞான தேசிக
சுவாமியவர்கள்மீது பாடிய

# சப்த ரச மஞ்சரி

சற்குரு சரித்திரம்
சற்குரு திருவெம்பாவை
சற்குரு திருப்பள்ளி எழுச்சி
சற்குரு இரட்டை மணிமாலை
சற்குரு நான்மணி மாலை
சற்குரு பாமாலை
சற்குரு அனுபூதி மாலை
என்ற—ஏழு சுவைப் பூங்கொத்து

உ

சிவமயம்

# ஸ்ரீ சற்குரு லிங்க பந்தம்

## வெண்பா.

சீர்த்தகமே னிப்பரமன் செய்யகழல் காணவெல்லாங்
கார்த்தகலிங் கவ்வமய்ந்தென் காப்பவராய்—பேர்ப்பனுவல்
அல்லலக லச்சொல்லு மண்ணல் குருநாதச்
செல்லப்ப தெய்வலிங்க மே.

இதன் பதப் பொருள்—ஏ மனமே—சீர்த் தக மேனிப் பரமன்=சிறப்பும் பெருமையும் வாய்ந்த திருமேனியை யுடைய பரம சிவத்தினது — செய்ய கழல் காண = செவ்விதாகிய திருவடிகளைச் (சீடர்கள்) தெரிசிக்க வேண்டி— இங்கு = இவ்விடத்தில், (அவர்கள் ஞான சட்சுவை மறைத் திருக்கின்றதும்) அய்ந்தென் = ஐந்து என்று கூறும்படியாக —அகல் = விரிந்திருக்கின்றதும் ஆகிய — அவ்வம் (அவம்) = குற்றம், அதாவது பஞ்ச மகா பாதகங்கள் —எல்லாம் = அனைத்தையும் —கார்த்து = காறியுமிழும்படி செய்து அதாவது நீக்கும்படி செய்து — காப்பவராய் = ரக்ஷிப்பவராயும் — பேர்ப்பனுவல் ÷ பெருமை பொருந்திய ஞான சாஸ்திரங்களை—அல்லல் அகல சர்வதுக்க நிவர்த்தி (பரமானந்தப் பிராப்தி)யின் பொருட்டு —சொல்லும் = உபதேசித் தருள்பவராயும் உள்ள — அண்ணல் பெருமையிற் சிறந்த—குருநாத = சற்குருநாத ராகியது—செல்லப்ப = செல்லப்பர் என்னும் திருநாமம் அமையப்பெற்ற — தெய்வலிங்கமே = தெய்வீகத் தன்மை வாய்ந்த சிவலிங்கமே யாகும் (ஆதலால் அதை வந்தித்துச் சிந்தித்து வழிபாடு செய்வது நம் கடமையாம;)

B



# ஸ்ரீ சற்குரு மாலைமாற்று

## வெண்பா.

காசிதே வாந்தபய காதா மனோகமல
வாசா மனோனிலய மாவேசா—ஈசாவே
மாயலனி னோமசா வாலமக னோமதா
காயபதந் வாதேசி கா

இ. ள்-சி = சிவமாகிய — தேவ — கடவுளே — மனோகமல வாசா = இருதய தாமரையின் கண் வீற்றிருப்பவரே — ஈசாவே = தலைவரே — மா ஈசா = மகதைஸ்வர்யம் உடையவரே — தேசிகா = சற்குரு மூர்த்தியே—கா = காப்பாற்றும் — மாயல் மரணமாகிய — அனி = பெட்டியில் அகப்பட்டு — னோ = னோகுதல் வடிவ துன்பத்தால்—அசா = தளர்ச்சியடைந்து — வால மகன் = பாலகனாகிய அடியேன்—னோமதா = வருந்துதல் தக்கதோ—வா = எழுந்தருளி வாரும் (வந்து) — காயபதன் = காய சித்தியும் (யோகசித்தியும் ஞானசித்தியும் தந்து) — மனோ நிலயமாவ = மனமானது (பிரஹ்ம சொருபத்தில்)ஸ்திதி பெறுமாறும் செய்து—அந்த பயன் = முடிவான (முத்திரூப) பிரயோஜனத்தையும் — தா கா = தந்து ரக்ஷித்தருளும் பிரபு (தன் கடன் அடியேனையும் தாங்குதல். என்கடன் பணி செய்து கிடப்பதே.)

உ

# ஸ்ரீ சற்குரு பத்மபந்தம்

## வெண்பா.

ஞானகன மானமன ஞானவன மோனமுன
ஞானகன பானுநிகர் நற்றவத்தோர்—வானம்நேர்
தந்தைமெச்சு ஞான தவராஜ செல்லப்பர்
சிந்தைமெச்சு கின்ற சிவம்

இ. ள்– ஏ மனமே—ஞான = ஞானமாகிய–கனம் ஆன = ரசம் பொருந்திய—மன் = மனமும்—ஞான வன மோன = ஞான வடிவ அழகு பொருந்திய மௌனமும்—உன = கருத — அதாவது உண்டாக வேண்டுமென்று தியானிக்க, (அதனால் அவர்கள் கருத்தறிந்து கருத்தின் உள்ளே யிருந்து முடிக்கத் தக்கவராதலால்)—கன வானம் நேர் = பெருமை வாய்ந்த ஆகாயத்தைப் போன்ற (வியாபகமான பரப்பிரஹ்ம சொருபஞானம் வாய்க்கத் தக்க)—ஞான நற்றவத்தோர் = அறிவோடு கூடிச் செய்யா நின்ற நல்ல தவத்தை யுடைய மேதாவிகளுக்கு —மெச்சு = விரும்பத்தக்க—பானுநிகர் ஞான தந்தை = (புறவிருளைப் போக்கும்) சூரியனைப் போன்று (அஞ்ஞான அந்தகாரத்தை நிவர்த்தித்து மெஞ்ஞான மார்க்கத்தில் நடப்பிக்கும்) ஞான பிதாவாக வீற்றிருக்கின்ற — தவராஜ செல்லப்பர் - (பவபாசம் போக்கத்தக்க) தவராஜ சிங்கமாகிய (சிவராஜ ராஜரெனும்) செல்லப்ப சற்குருவே — சிந்தை மெச்சுகின்ற சிவம் = (அடியார்கள்)மனமுவந்து மதிக்கத்தக்க பரமசிவமாம் (ஆதலால் நாமும் திரிகரணங்களும் தித்திக்கக் கசிந்துருகிப்பாடி மகிழ்வோமாக.)

# ஸ்ரீ சற்குரு அஷ்டநாக பந்தம்.

## வெண்பா.

யோகா நிதபல யோக வரகுண
பாகா பரவண மாகதபா ... ஏக.
கனவன மோனக் கதிதருசெல் லப்பா
தனமான ஞானம்நீ தா.

இ. ள்– யோகா—ஐக்ய சொருபரே அதாவது பிரத்தியக்க பின்ன பிரஹ்ம சொருபரே—நித பல யோக = நித்தியமான பிரயோஜனத்தை யடைந்தவரே—வர குண பாகா = மேலான சத்குணப் பான்மை வாய்ந்தவரே — பர வண மாகதபா = (தன்னைச் சரணடைந்த புண்ணிய புருடர்களை பார்வை மாத்திரத்தால் = அதாவது கிருபா வீக்ஷண்ணியத்தால்)பர வடிவம் ஆக்கத்தக்க தவம் நிறைந்தவரே—ஏக கன வன மோனக் கதி = ஒன்ருயும், பெருமையும் அழகும் மௌனமும் உடையதாயும், உள்ள முத்தியை—தரு = (அதிகாரி புருடர்கட்கு உபதேச வாயிலாக) அளித்தருளா நின்ற — செல்லப்பா = செல்லப்ப ஞான தேசிக, சிகாமணியே—நீ = தேவரீர் — தனம் ஆன ஞானம் தா = மகதைஸ்வர்ய வடிவ மான (பிரஹ்மான்ம ஐக்ய) ஞானத்தை (அடியேற்கு மனம் உவந்து) அளித்தருள வேண்டும் பிரபு. (தேவரீரையே தஞ்சமெனக் கருதியுள்ளேன் ஆண்டருள் புரிவாய் அப்பா.)

உ

# ஸ்ரீ சற்குரு ரத பந்தம்.

## கலித்துறை.

சித்தான பானு சிவஞான வண்ணத்த தேவவசி
வத்தான தத்துவ மாகத் தவவதே மத்வயமா
பொய்த்தான வத்தெலா நீக்குபூ தாதிப பூரணமா
சித்தாப்பல் வாச்சொலத் தானல்ல செல்லப்ப தெய்வமதே

இ. ள்– சித்தான பானு = ஞான சூரியராயும்—சிவஞான வண்ணத்த = மங்களகரமான சின்மாத்ர சொருபராயும், உள்ள தேவ = சற்குரு தேவா — பொய்த்தான வத்து எலாம் நீக்கு = மித்தியாபதார்த்தங்கள் அனைத்தும் (தானும் அல்ல தன்னுடையதும் அல்ல ஆயினும் அகம், இதம் விருத்தி விஷயமாயும், அகங்கர மமகர அபிமானத்திற்கு இடமாயும் இருந்து பந்த ஏதுவாதலின் துன்பமாம் என) நீக்கி யருளிய —பூதாதிப. (பூதஅதிப) = சர்வ ஜிவ நாயகரே – தத்துவம். (தது துவம்) = அது நீ என்ற—வத்தான அது ஆக = பதார்த்த மாக (பத அர்த்தமாக)வுள்ன — தவ = மிகுந்த அதாவது பெரிய (பிரஹ்ம)—வதே மத் வயமா (வத் ஏம் அத் வயமா) வஸ்துவானது எமது நீஜசொருபத்துடன் ஏகமாகும் வண்ணமும்—பூரணமா சித்தா = பூரண ஞான சொருபமாகவும் — பல்வாச் சொல = நா நாப் பிரகாரமாகவும் உபதேசிக்கத் தகுந்த – நல்ல செல்லப்ப தெய்வமே = ஆனந்த கன சொருப செல்லப்ப ஞான தேசிக தெய்வமே — வசி = வாழ்க வாழ்க நீடுழிவாழ்க தான்—அசை—தெய்வமதே என்ற விடத்துள்ள அது என்னும் பதத்தை வத்தான. ஆக, என்றதன் இடையில் கூட்டி வத்தான அது ஆக. என்றமைத்துப் பொருள் கூறப் பட்டது.

8

உ

# சாற்றுக் கவி

**ஸ்ரீ தவராஜர் புகழும் சிவராஜ ராஜர் ஸ்ரீ வீர-காசிகானந்த ஞானசார்ய சுவாமியவர்களால் இயற்றிய சாற்றுக்கவிகள்**

அரிமழ மென்னும் நகர்தனிற் றோன்றி
யடியராய்க் கோவிலூர் சார்ந்து
பெரியராம் ராம சாமியென் குருவாற்
பிரமமா ஞானமும் பெற்று
அரியராய் ஞான அனுபவ முடைய
ஆரிய மணியென விளங்கி
பெரியவே தாந்தசூ டாமணி தனக்கும்
பெருமைசேர் கைவல்ய நூற்கும்
தேசினிற் றிகழும் பதவுரை பொழிப்புச்
சிறக்கவே யமைத்துநற் றஞ்சை
மாசறு மதுரை சாக்கைநன் மடத்தில்
வசித்துமே மறைப்பொருள் கூறி
ஆசறு மருணு சலன்முத லடியார்க்
காரணப் பொருள்தனை யோதிக்
காசறு காசி நகர்தனி லொன்றுங்
கவினுறு மடமதை யமைத்தே
உலகதில் வாழ்ந்த செல்லப்ப ஞான
வுயர்குரு பரர்சரி தத்தைத்
திலகம தென்ன அன்னவர் சிடர்
சிவானந்தர் சிறப்புறச் செய்தார்
பலகலை யாய்ந்த பண்பினர் நோக்கிப்
பலனெலாம் பண்புறப் பெற்றுச்
சிலதடை யின்றிச் சிவமதே யாகிச்
சின்மய வாழ்வடை வாரே.

### ஸ்ரீ முனிவரர் போற்றும் கன மனச் சான்றோர் ஸ்ரீ அரு. சங்கர சுவாமியவர்களால் இயற்றிய சாற்றுக் கவிகள்

கங்கையும் பிறையும் மங்கையும் கரந்து
கருணைசே ராரிய வுருவாய்ப்
பொங்கொளி கான ப்பேரிடை வந்த
புகழ்குரு செலலப்பர் தாளில்
நங்கையாம் பாவை பள்ளியு மிரட்டை
நான்மணி மாலையும் புனைந்தார்
சங்கையி லாத சற்குரு சரிதந்
தன்னையும் வளம்பட வுரைத்தார்

சீர்பெறு மிளசை வாழுஞ் சிவசுக முனிவச் செம்மல்
பார்பெறுஞ் சிவன் முத்திப் பதியதாங் கானப் பேர்வாழ்
ஏர்பெறுஞ் செல்லப் பேச வெழிற்குரு சரணந் தன்னில்
நார்பெறுஞ் குருப்பா வென்னும் நன்மாலை சாத்தி னரே.
தண்டமிழ் உலகில் வாழுஞ் சற்சனப் பெரியோர் மேலாம்
அண்டர்மா முனிவர் சித்தர் அனைவரும் வியக்கத் தக்க
கண்டென வினிக்கத் தக்க கவினலப் பான்மை மிக்க
எண்டரு மனுபூ திப்பா வியற்றினு ருலக முய்ய

### ஸ்ரீ புவிராஜர் மெச்சும் கவிராஜ பண்டிதர் ஸ்ரீ ஜெகவீர பாண்டியனர் இயற்றிய சாற்றுக் கவிகள்

உண்மையறி வானந்த வுருவான வொருவனே யுயிர்கள் தோறும்
ஒண்மையுட னுறைந்துள்ள வுண்மையினை எண்மையுற வுணர்த்தி ஞானத்
திண்மையுறு செல்லப்ப தேசிகர்மேற் பாமாலை திகழச் செய்தார்
தண்மையினை யான்குடிவாழ் சிவானந்த சாமியெனுஞ் சாது மாதோ

கற்றுணர் தவத்தர் இந்தக் கவின்பெறும் நூலை யேற்று
அற்றமில் கருத்தும் சொல்லும் அரும்பொருள் நயமும் நோக்கி
முற்றுணர் யோகம் ஞானம் முதலவாம் பயனும் பெற்று
பற்றறுத் தமல மான பதமதை மேவு வாரே.

உ

சிவமயம்

# ஸ்ரீ சற்குரு செல்லப்ப ஞான தேசிக சுவாமி அவர்களது சரித்திரம்

## முகவுரை

பூ உலகிற் சிறந்த பாரத அன்னையின் வதனமெனத் திகழும் பாண்டிவள நாட்டிலே தலைசிறந்த சிவபதி பதினுன்காம்: அவற்றுள் கானப் பேரூர் என்னும் காளையார் கோவிலும் ஒன்றும். இது சச்சிதானந்தாதி சொருப லக்ஷணராயும், ஆஸ்தூலாதி அதத்வியா விருத்தி லக்ஷணராயும், ஜதத் சிருஷ்டியாதி தடத்த லக்ஷணராயும் உள்ள. பரமேஸ்வரர் ஆன்மகோடிகளை உய்விக்கும் பொருட்டு குருலிங்க சங்கமம் என்னும் மூவகை ரூபமாய் ஆவிற் பவித்து வருவார் என்று வேதம் ஆகமம் ஆதிகள் விளம்பு கின்றன. அவ்வகையான மூவித வடிவங்களையும் தன்னகத்தே கொண்டு மூவர்கள் பாடலும் அமையப் பெற்று மகோன்னதமாக விளங்கு கின்றது.

இதில் கோவில் கொண்டு ஸ்ரீ சச்சிதானந்த அகண்டபரி பூரண பரமானந்த பரமசீதள பிரத்யக்க பின்ன பிரஹ்ம சொரூபப் பேரொளிப் பிழம்பாய் விளங்கும். எங்கள் சற்குரு ஸ்ரீ செல்லப்ப ஞான தேசிகப் பெருந்தகை வள்ளலார். நகர வணிக மக்கள் உறையும் நகர் தொண்ணூற்றுறினில், பெரு வளம் பலநிறை அரிமள நகரில் சீரும் சிறப்பும் செல்வமும் பெற்று பேரும் பெருவாழ்வும் பெருமையும் உற்று வாழ்ந்த, இராமைய வணிகர்க்கு அவர். மனையவளாம் அருந்திறற்

கற்பின், அருந்ததி யனைய. அழகம்மை யகட்டில் திரு.வறம் நீதி ஜெயம் புகழ் எல்லாம் கருவிடை யுருவாய்க் கருணைசேர் மகவாய்க் கர சரணுதி அவயவாகார திவ்ய மங்கள தேஜோன் மய ரூபமாய் உதித்த தென்றுரைக்க கலியுகம் 4963 க்குச் சரியான துந்துபி வருடம் ஆனி மீ 29உ வெள்ளிக்கிழமை பௌர்ணமி திதி, பூராட நட்சத்திரம் மகேந்திர யோகம், பத்திரை கரணம், கடகலெக்கினம், தனுஷ்ராசி, கும்ப அம்சம், கூடிய சுபவேளையில் பூவுலகில் ஜனித்தர்ர். பெற்றவர், உற்றவர், மற்றவர், யாவரும் கண்டு களித்தார். நாடும், நகரமும், பீடுற விளங்கின. பாராட்டிச் சீராட்டிப் பாலூட்டிச் சோறூட்டிப் பண்புற வளர்த்தார். காண்பவர் கண்களி கூர நன்குறு புதல்வரும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்தார். ஆண்டு மென்மெலவே தாண்டியே வருநாள், அழகும் பொலிவும் அறிவும் குணமும் அருளும் தெருளும் அடைந்துமே வந்தன அரியசொற் பயிலும் ஆற்றலும் தோற்றமும், ஐந்தெனத் திகழும் பருவமும் உற்றன. கற்ற மேலவர் பால் பெற்றவர் சேர்த்து. அறம் பொருள் இன்பம் வீடு என நான்கும் அடைவதற்குரிய, அரும் பெறற் கல்வியை அடைவுறச் செய்தார். மைந்தராம் இவரும், பைந்தமிழ் மொழியில் வந்துள நூலை, வரம்புறக் கற்றூர். உரமுற வுணர்ந்தார். திறம்பெறத் தெளிந்தார்.

பருவமும் உருவமாய், பயப்பய வளர்ந்து பதினைந்து உறவே, பதிதனை நைந்து, பண்புற நினைந்து, காதலும் பயமும், கர்வமும் அகன்று, ஆதலும் சாதலும் அகமதில் உணர்ந்து, அநித்ய வாழ்வைச் க்ஷணத்தினில் மாற்ற. ஆரணம் மொழியும் பூரண வுணர்வே அடைவுற வேண்டும். அதனைக் காரண குருவின் கழலடைந் தன்றித், தாரணை சமாதியால் சார்ந்திடலாகாது, என வுணர்ந்து, அகன்ற மன நிலை பெற்று, தந்தையும் தாயும் தனிவிடை தரவே, சற்குரு நாடிச் சமிவனம் சென்று, கோவிலூர் மடத்தில் மேவியன் றுறைந்த, குருராமசாமி தேசிக மணியைத், தாவியே பணிந்து, தண்ணருள் புரிவாய், தனிமொழி புகல்வாய், தமி

யனே யாள்வாய்: சற்குரு மணியே. எனச் சரண் புகுந்தார் ஆரிய ருணர்ந்து, ஆறிய மொழியால் ஆதரித்து? அண்மையி லமர்த்தி, அருமறை முடிவாம் பெருமுப தேசம் அடைவுட னோதி, அமல ஞானத்தை, மும்மல மகற்றிட, நிபிடமாய்த் தந்தார். செவ்விதிற் பெற்ற. செல்வராம், செல்லப் பேசரும். உணர்ந்து, சிந்தை களிகூர்ந்து வந்தனே தந்து, மலரடித் தொண்டு நிழலென வாற்றி, வதிந்தனர் சின்னுள். இதம் பதம் பெறவே. சற்குரு ராம தேசிக பரரும், சாஸ்வத முத்தி தனையடைவுற்ருர்.

அன்னதின் பின்னர். சற்குரு தனக்குச் செய்வனசெய்து பலபகல் கழித்தார், சலன மதறுத்தார், பின்னர். சாக்கை புதுவயல் தனிப்பெருந் துறையும்' பாக்கியம் போலும், பகர் பதி யனைத்தும். நோக்கியே விருத்த கிரிசென்று சேர்ந்தார். ஆங்காங்கு வந்த, அரும்பெரும் தவர்க்கு. அறம் தரும் நூலும். அருமறை முடிவும், அனுக்கிரகித்து வந்தார். அருளுட னுவந்தார். தர்க்க யுத்திகளும், தகுமறைப் பொருளும், பக்குவர் தமக்குப் பண்புடன் உரைத்தார். பக் குவமிலாத பலர். தனைவேண்டி மக்களும், மனையும், சொர்க்கமும், பொருளும், சிக்குறக் கேட்டுத் தேடிவந் தடைந்தவர்க்கு, அவ்வப்போது. அருந்தவத் துதவியும், ஆண்டு பல ஆங்கு நீண்டுற அமர்ந்தார். இத்தகைச் செயலை எழிலுறக் கேட்ட தஞ்சை பால்ச்சாமி தனிமடத் துறை வோர், வந்துநம் குருவின் மலரடி வணங்கி, மகத்துவ சமத் துவப் பெரியீர்; எங்களை யாண்டு இன்னருள் புரிய, தஞ்சை யில் வாழும் தவசிவ முனியாம், சற்குரு பாலுச்சாமி மடத் துக்குச் சார்ந்திடல் வேண்டும்: எனவுரைத் திரந்தார். ஆங்கவர் வேட்கை யடைவுடன் முடிக்க சற்குரு நாதர், தஞ் சையை யடைந்தார். சார்ந்து இனிதுறைந்தார். சற்சனர் நிறைந்தனர், தனத்தினர் பலர் அளித்த தகும் பொருள் கொண்டு, தகைபெற மடத்தைச் சால்புற அமைத்தார். சாந்தி சேர் பாடம் தகுதியாய் உரைத்தார்.

இத்தகு நிலையில், இனிதுறும் நாளையில், சால்புறு பல வளத் தேவகோட்டையில் வாழ் சற்குண அருணசல வணிக ரும். தாபதர் பலரும், சரண்புகுந்து வந்தார். தத்துவம் உணர்ந்தார்- இங்ஙனம் பலர் பல இனிதுறும் வேளையில், அத்வைத போதக அமலதற் பரனும், முத்து ராமேச முதல் வன் நற்கழல் சூழ், குட்டய சுவாமி என் குருபர நாதர், அங்கயற் கண்ணியின் அருள்பெறு புனிதர், சங்கட மகற் றும் தனிப்பெருந் துறவி, பக்குவ மாகச் சொக்க நாதர்க்கு பணிபல இயற்றிய தனிமனச் சான்றோர், மதுரைமா நகரில் சதுர்பெற மடமதைச் ஸ்தாபித்தா ரன்றே. அத்தகு மட மதை, மெய்த்தக விரித்து, உத்தம சற்சனர் நத்தியே வாழ் தரத், தத்துவம் உணர்த்திச் சார்ந்தனர். பல பகல் விண் ணவர் புகழும் கண்ணப்ப சுவாமி என் புண்ணிய சீலர். செய்தவர்க் கருளும் பொய்தவிர் புனிதர்.

அன்னவர் மெய்வினை நீத்து. வீட்டினை யுற்ருர். ஐய நீ, அங்கு ஐயனுய் அமர்ந்து. அடியவருய்ய. அருளுக வென்ன. அருந்தவர் கூற. அரும் பெரும் தவ சிரோன்மணியாகிய நம் செல்லப்ப ஞான தேசிக பரரும், அருளுட னுவந்து வருகு தும் என்ருர். அங்ஙனே வந்தார். மடமது தன்னின் அதிப ராய் அமர்ந்தார்.

மதுரையம் பதியில் மன்னிய தவத்தர், மாண்பொருட் டலைவர், மகிமை மிக்குள்ளார். அனைவரும் வந்து அடிமலர் வணங்கி, அடைக்கலம் புகுந்து, கேட்பன கேட்டு, அறிவன அறிந்து, அடைவன அடைந்து, ஆனந்தமாக அகம் மகிழ் வுறு கின்றனர், என்ற இச்செயலை எழிலுறக் கேட்ட, தேவ கோட்டையில் வாழ் சீமானும் அருணசல வணிகர் அகம் மகிழ்வுற்று, தன் மனத்துள்ள சங்கற்பம் முற்றும், தவம்

பலித்ததென எண்ணி, ஆலயம். சாலை, அக்கிராரம், நந்தன வனங்கள், ஆச்சிரமங்கள் நிறைந்த நம் காளையார் கோவிலில் வேதாந்த மடம் நன்கு அமைத்து, நம் குருஞான செல்லப்பரைக் கொணர்வேம். எனக் கருதி. ஆச்சிரமத்தை மகோன்னதமாக அமைத்தார். பின்னர், மதுரை மாநகர்க்கு அடியவர் சகிதம் சென்று அழைத்துமே வந்து, ஆண்டவரை அமரச் செய்து, ஆனந்த பரவசர் ஆனுர். அடியார்கள் நிறைய வந்து அறிவன அறிந்து, ஆர்ந்த பெற்றியராய் அமர்ந்தார்கள். குருபரர் மகிழ்ந்து குணமணிக் குன்ருய் விளங்கினர்.

இவ்வாறு இங்கு இருந்துறுபோது, சாக்கை நன்மடத்தின். தலைவராய் வாழ்ந்த, சற்குரு முத்துக்கருப்ப சுவாமிகளும், சாஸ்வதமான தனிப்பதம் பெற்ருர். சற்குருவாகச் சார்ந்திட வேண்டும், செல்லப்ப ஞான சிகாமணி யெனவே, சேவடி பணிந்து, சிறந்த தனர்பலர். செவ்விதின் இரப்ப, சாக்கை, புதுவயல் சார்ந்துறை புதல்வீர். ஆக்கை யோடாவி அடைவுடன் அளித்திர். பாக்கியம் என்னச் சாக்கையை அடைவோம். சாக்கியாய் அமரும் தனிப்பதம் தருவோம். பெறுவீர் யாரும், வாரும் வாரும், என்று அழைத்து, சிரிய மடத்தில் செவ்விதின் அமர்ந்தார். சாந்திசேர் பாடம் தத்துவ நிலைமை சாற்றி வீற்றிருந்தார்.

மடமது தன்னை இடம்பெற அமைத்தார். மாண் பொருள் தன்னை வரம்புற வைத்தார். தஞ்சை பால்ச் சுவாமி தண்ணருள் மடமும். சாக்கை வீரப்ப சுவாமிகள் மடமும், மதுரை குட்டய மாண்புறு மடமும், காளையார் கோவில் கவின்பெறு மடமும், சாலவே நோக்கிச் சார்ந்தனர் பன்னுள் பின்னுள், சீடர்கள் தலைமையில் சிறப்புற வைத்தார்.

வைத்து, காளையபர் கொவிலில், கவினுறு மடமதில். தேவ தேவென்னத் திகழ்ந்தினி துறைந்தார். நேர்மையும், கூர்மை யும், ஓர்மையும், சீர்மையும் வாய்ந்த சிடர்கள் வந்து நிறைய ஆங்கவர்கட்கு பூரண ஞானம் போலிவுற வோதி, பூரண காரணன் நாரணன் ஆரணன் ஆதியர் ஓதிய பதமாம். போதப் பொலிவுடன் சித மதியெனத் திகழ்ந்தினி துவந்தார். பின்னர் பதும ஆதனத்தில், உடலதை அமர்த்தி சதுமுக னாதி தேவர்க்கும். அரிய அருவமும், உருவமும், ஆதியும் இல்லாச். சொருபமே தானும் சோதியாயினர். சமாதியா யின திருமேனிக்கு அன்பரும் அடியவரும், அபிஷேக அலங் கார, நிவேதன மாதிய புரிந்து, குகையிலமர்த்தி, சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பூஜையாதிய பொலிவுடன் புரிந்தார். நாளும் பொலிந்து நனி திகழ்ந்தனவே.

பின்னர், கவின் மடமதனின் காரியம் பார்க்க, கொல்லங் குடிவளர் ஸ்ரீ முத்தைய சுவாமிகளை குறிப்புடன் அமைத் தார். அவரும் சின்னாள் வசித்து சீர்பதம் பெற்றார். மூன் றாவதாக உலகம்பட்டி உயர்தவச் செல்வர், இலக்குமண சுவாமிகளை, இயல்புடன் அமைத்தார். அவரும் வளம்பெற மடத்தை நலம்பெற வகித்து, பலம்பெற வுற்றார். நான்காவ தாக தற்போது ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞான தேசிக பரமா சாரிய சுவாமிகளும், சுகர்வாம தேவ ராதியர் போன்ற ஆன்ம போத அமல ராயும் ஜனகன் மாபலி பகீரதன் ஆதியர் போன்ற, லௌகீக வைதீக விவகார குசலராயும். ஜடபர தாதியர் போன்ற க்ஷமையாதிய சற்குண பரராயும், விளங்கி மகொன்னத மகிமையுடன் ஆச்சிரமத்தைச் சிறப்புற நடத்தி வருகின்றார்கள். அன்னவர்களே இந்நூல் இயற்றவும் அரு ளாசி வழங்கினார்கள். இத்துடன் சற்குரு திருவெம்பாவை திருப்பள்ளி எழுச்சி இரட்டை மணிமாலை நான்மணி மாலை

சற்குரு பாமாலை அனுபூதி மாலை என்ற நூல்களும், சேர்க்கப் பட்டிருக்கின்றன. இத்துடன் லிங்கபந்தம், மாலைமாற்று, பத்மபந்தம், அஷ்டநாகபந்தம். ரதபந்தம் என்ற கவிகளும் ஷ சித்திரங்களுடன் இணைக்கப்பட்டுள்ளன.

இவைகளை அச்சியற்றுமாறு பொருளுதவி புரிந்த புண்ணிய சிலர்கட்கு எனது மனமார்ந்த நன்றி வுரித்தாகுக. இந்தச் சரித்திர முதலிய நூல்களை, ஸ்ரீ சற்குரு நாதரது சரணார விந்தப் பிரஸாத லேசத்தால் இயற்றினேன். இயற்றி. அன்னவரின் பொன்னடிக் கமலத்திற் புனைந்தேன். பிழை யுளதேல் பெருமான் கருணை. பேருலக அன்பு. பொறுத்தருள் புரிக. சாந்தி! சாந்தி!! சாந்தி!!

ஜனனம் 11—7—1862 துந்துபி ஞ ஆனி மீ 29உ வெள்ளிக்கிழமை பூராடநக்ஷத்திரம், சற்குருலாபம் 13—9—1877 ஈஸ்வர ஞ, ஆவணி மீ, 30உ வியாழக்கிழமை சப்தமிதிதி, அனுஷநக்ஷத்திரம் சாஸ்வதமுத்தி 13—8—1922 துந்துபிஞ, ஆடி மீ, 29உ ஞாயிற்றுக்கிழமை, ரேவதி நக்ஷத்திரம்.

இங்ஙனம்,

சிவானந்த சுவாமி வேதாந்த மடம்.

இளையான்குடி.

# ஸ்ரீ குருமரபு வணக்கம்

திருமருவு நாரண னு மயனொடு வசிட்டருஞ்
சீர்சத்தி பராச ருமே
திகழ்வேத வியாசர்சுகர் கௌடபா தாரியர்
தீரகோ விந்த முனிவர்
தெருண்மேவு சங்கரா சாரியர் சனந்தனர்
திகழுமத் தாமல கர்தோடகர்
தேசிக சுரேசுரர் வித்தியா ரண்யகுரு
திரசுப்ர மண்யர் நயினர்
அருண்மேவு அழகப்பர் வீரபத் திரகுரு
அரியமுத் தயரு கந்தர்
அருமுத்தி ராமேசர் அருமையரு ணசலர்
அழகுறு சிதம்ப ரேசர்
கருவிலுறு துயரகல வருராம தேசிகர்
கருணையுறு செல்லப்ப ராமிவர்
கான்மரபில் வருசிவ சுகமான நானிவர்
கழலிணை கள்தொழு துய்வனே.

மற்றும்

தேங்கமழு கயிலைமலை யுறைதேவ தேவனுந்
தெக்ஷிண மூர்த்தி சனகர்
திகழ்மறை வியாசர் சுகர் கௌடபா தாரியர்
செய்யகோ விந்த பாதர்
பாங்குபெறு சங்கரா சாரியர் சுரேசுரர்
பதிவான இவர்கள் மரபில்
பழமறை விளம்புவித் தியாரண்யர் சுப்ரமண்யர்
பாரிலழ கப்பர்முத் தையரே

தேங்குபுகழ் ஞானகு ருகந்தலிங் கேசருயர்
திருமருவு முத்தி ராமர்
திறமையரு ணசலர் சிதம்பரரு மான்மநிலை
திகழ்விக்கும் ராம சாமி
நீங்கரிய காளையம் பதியில்வளர் செல்லப்ப
நீதிபரர் நித்த சுத்த
நிமலபர குருமரபை யதனில்வரு சிவசுகன்
நிதமிதம் பெறநி னைவனே.

திருமலி யுகந்த தேசிகன் றன்னைத் திருமுத்து ராமதே சிகனை
தெருண்மிகு அருண சலமுனி வரனைச் சிதம்பர தேவனும்
முனியை
அருண்மிகு ராம சாமிதே சிகனை அருமையாஞ் செல்லப்ப
குருவை
திரிவித கரண மதனினுல் வணங்கிச் சிவசுகன் முத்திபெற்
றுய்வாம்.

முத்தியே தந்த முத்திரா மேச முதல்வனை யவனடி மலரை
நத்திய அருண சலமுனி வரனை நாதனும் சிதம்பர முனியை
சித்தியா மவன்றுள் சிரமதிற் சூடுந் தேசிக ராமனை யவன்றுள்
பத்தியா லணிந்த செல்லப்ப குருவைப் பணிவொடு
பணிந்திட ரொழிப்பாம்.



உ

ஓம் தத் சத்
பரப் பிரஹ்மணே நம:

# ஸ்ரீ சற்குரு செல்லப்ப ஞான தேசிகரது சரித்திரம்

## பாயிரம்

செல்லப்ப தேவாவுன் சீரார் சரிதமதை
வல்லபமாய்ப் பேச வரந்தருவாய் — நல்ல
குணபதியே நாளுங் குடியிப்பாய் நாவில்
கணபதியே கைதொழுதேன் காண். 1

தக்க குருநாதன் சாதம் திதியடக்கம்
பக்குவமாய்ச் சாற்றப் பரம்பொருளே — மிக்க
கயமுகனே சண்முகனே கண்ணுதலே தேவி
நியமமதா யுள்ளுறைவீர் நீர் 2

வேறு

தருமதா னங்கள் குன்றிச் சாதுக்கள் தமக்குத் தீங்கு
கருமிகள் செய்ய நேருங் காலத்தி லீசன் றானே
திருவுரு வெடுத்து ஞாலம் செவ்வைசெய் தருள்வ னென்று
சுருதிதா னுரைத்த வாறே தோன்றினர் செல்லப் பேசர் 3

தவமுனி வரர்கள் சித்த சரோருக மலரப் பூவில்
அவமுறும் கலர்கள் சித்த ஆம்பல்கள் குவிய நல்ல
நவமுறு கோள்கள் ராசி லக்கினம் நலமாய்ச் சாரச்
சிவமுறுஞ் செல்லப் பேசத் தினகர னுதித்தா னன்றே 4

---

4 சரோருகம் = தாமரை. ஆம்பல் = குமுதம். கலர்கள் = கீழ்மைப்புன் தொழில் இயற்றுவோர். நவமுறு கோள் கள் = நவக்கிரகங்கள். சிவமுறும் = மங்களகரமான.

வேறு

சீர்வளச் சிறப்புந் தெருவள நிரப்புந் தேர்திரு
வாலயப் பரப்பும்
நீர்வள மலிவும் நிலவளப் பொலிவும் நிகழுநால்
வருணத்தர் தெளிவும்
கார்வள நிறைவுங் கலைவள முறையுங் கலைவலோர்
கற்பனைக் கடங்கா
பேர்வளம் பலவார் அரிமள நகரிற் பிறந்தனர்
செல்லப்ப குருவே 5

ஆரிய மறையை யளவுட, னிறுவி அங்கமும் பிரமசூத் திரமும்
நேரிய மதியர் புகழுபா ரதமும் நிகழுறு புராணமூ வாறும்
கூறிய மதியோர் புகழுற வமைத்துக் குலவிய வாதரா
யணரே
சீரிய மதியோர் சிடராய்த் திகழச் செல்லப்ப குருவென
வந்தார். 6

கருவினி லுருவாய்த் துந்துபி யானி கருதிய வுலகிடை வந்தார்
குருவினைப் பருவம் பதினாறு சிம்மங் குலவிய மதியினி
லடைந்தார்
திருமரு சொருபந் துந்துபி யாடி திகழ்மதி பூரண மானார்
பொருவறு குருவின் பூரண கிருபை புந்தியி லடைந்துமே
புகன்றேன் 7

வேறு

தக்கவர் புகழும் ஞான சற்குரு சரிதந் தன்னைப்
பக்குவர்க் கறியும் வண்ணம் பகர்ந்திடத் துணிந்தேன் பாரில்
தக்கதே யாக வன்றித் தகாததே யாக வித்தை
மிக்கபே ரறிவு சான்றோர் மேன்மையாய்க் கொள்க வென்றே 8

இளசையில் வாழ்ந்து வந்த வியற்சிவ சுகநான் சொன்ன
வளமலி குருவின் மேலாம் வரமுறு சரித மித்திற்
களமிலை யுளது போலக் கற்றவர் கருத்திற் றோன்றில்
துளபமால் துணையாய்க் கொண்டு துகளதைப் போக்க
வேண்டும் 9

---

7 குருவினைப் பருவம் பதினாறு ..அடைந்தார் = சற்குருவை-பதினாருவது ஈஸ்வர வருஷம் ஆவணிமாசம் 30உ வியாழக் கிழமை அனுஷ நக்ஷத்திரத்தில் அடைந்தார்.

செல்லப்ப தேசி கேசர் திருவடி நினைப்போர்க் கெல்லாம்
அல்லற்பல் வினைகள் நீங்கும் அரும்பெறல் மகவுண்டாகும்
கல்வியில் வலிய ராவர் கருத்துறு பலனுண் டாகும்
செல்வநல் ஞான முண்டாம் சிவபதம் நேரும் தானே 10

வேறு

துந்துபியி லானி தொடரிருப தொன்பது நாள்
வந்தவெள்ளி பூராடம் பூரணையில் — வந்தி ரவி
ஐந்தான நாழிகையி லார்கடக லக்கினத்தில்
வந்தார்செல் லப்பகுரு மன் 11

ஓரறுப தொன்றினிலே யோர்கடக மாதமதில்
சீரிருப தொன்பான் றினகரநா — ளீரிரு வொன்
ருனதிதி ரேவதிநா ளன்றுதய நாழிகையொன்
ருனகதி செல்லப்ப ராம் 12

வேறு

சற்குரு செல்லப் பாவுன் ருள்நிழ லதனில் வாழும்
அற்புதப் பேறு பெற்ற வன்றெலா மடையப் பெற்றேன்
நிர்க்குண சொருப வாழ்வில் நிமிடமும் பிரியா வண்ணம்
பொற்புட னிற்க நீயும் பொறியருள் வழங்கு வாயே 13

பாயிரம் முற்றும்

---

12 ஓரறுபதொன் ... மாதமதில் = அறுபத் தொன்றுவது வருஷத்தில், ஒன்றுவது மாசமான ஆடி மாசத்தில்

13 பொறியருள் = ஞானமும், கிருபையும்—



உ

சிவமயம்

ஸ்ரீ கணேஸாய நம

# ஸ்ரீ சற்குரு சரிதம்

பூமகன் படைத்த அண்டகோ டிகளிற் பூவுல
கணைத்தினும் பொலிவாம்
கோமகன் பரத ஞண்டபா ரதமும் குலவிய
வதில்மிக நலமாம்
தேமகன் மலர்கள் நிறைந்தகா வினஞ்சூழ்
தென்பாண்டி நாடதில் உயர்வாம்
ஏமகன் மனமார் தனதுநன் மரபோர் இருந்திடு
நகரதிற் சிறப்பே 1

திருமக ளுறையு மரிமள நகரின் சிறப்பினை யறியுமா
றெளி தோ
கரிமுக னுறையுங் கவினுமா லயமுங் கந்தன
திருக்கையுங் கவுரி
திரிபுர தகன னுறையுமா லயமுந் திருமரு
மார்பனற் பதியும்
பெரியவ ருடல மடங்குநற் குகையும் பெருமையாச்
சிறந்தன வாமே 2

சீர்மிகுந் திலங்கும் பாண்டிய நாட்டிற் சிறந்திடு
தனவயி சியர்கள்
பேர்மிக வோங்கும் நகர்தொண் ணூற் ருறிற்
பிறங்கிடு மரிமள நகரொன்
ரூர்வமு மன்பு மரனடித் தொண்டு மாற்றியப்
பதியினிற் சிறந்தோன்
ஏர்மிகு தவமும் ஞானமுங் குணமு மியல்பதா
யமைந்திடு பெரியோன் 3

அருண்மிகு புனிதர் ராமைய வணிகர்க் கவர்மனை
யருந்ததிக் கற்பின்
பெருந்திரு வென்னப் பேசுநற் குணங்கள்
பெருமையாய்ச் சிறந்துள புனிதை

தெருண்மிகு ஞான அழகம்மை யகட்டிற் றிருவறஞ்
செயம்புக மெல்லாம்
கருவிடை யுருவா யுதித்ததென் றுரைக்கக்
கருணைசேர் மகவுதித் ததுவே 4

பார்வரு கலிநா லாயிரத் தொன்பான் பகர்சத
மறுபதின் மூன்று
யார்தரு வருட துந்துபி யானி யையைந்து
நாலுறு தினத்தில்
ஏர்தரு வெள்ளி புரணைபூ ராட மியலுறு கடக
லக்கினத்தில்
கூர்தரு கும்ப அம்சிசந் தன்னில் குருவர
விறையுதித் தனரே 5

கடகலக் கினமா மிரண்டினிற் காரி கனகுரு
மூன்றினி லாகும்
தடமுறு வாறிற் சந்திரன் ராகு தகுசெவ்வா
யொன்பதி லாகும்
விடமுள அசுர குருபதி னென்றில் வியத்திலே
ரவிபுதன் கேது
தடசுங்க திசையில் வியாழபுத் தியிலே சற்குரு
அவதரித் தனரே 6

உதித்தவக் குழவிக் கொப்புயர் வில்லா வுருவமும்
புருடலக் கணமும்
கதித்துற நோக்கி உறவினர் பெரியோர் கற்றுணர்
சான்றவர்க் கொண்டுங்
துதிக்கருஞ் ஜனன ஜாதக மாதி தூயநன்
முறையினி லியற்றி
மதிக்கரு மகற்குச் செல்லப்ப னென்னும்
மாதவ நாமஞ்சூட் டினரே 7

ஆண்டொரு மூன்றின் அரியசொற் பயிலும் ஆற்றலு
மகமுக மகிழ்வும்
பூண்டயங் கெழிலும் பூரண வொளியும் பொற்பமை
நற்பத நினைவும்
காண்டவர்க் கினிய காட்சியும் பொலிவுங் கண்டுயர்
தந்தைதா யுவந்து
மாண்டகு முலகிற் பிறந்தநற் பேறிம் மகவினு
லானதென் றுவந்தார் 8

ஐந்தெனத் திகழு மாண்டினில் மகற்கு அரியநன்
மரபினிற் றிகழும்
மைந்துணர் கல்வி கேள்வியிற் சிறந்த மகிமைநல்
லாரியர்க் கொணர்ந்து
பைந்தமிழ் மொழியிற் பற்பல நூலும் பயிற்றுவித்
தகமகிழ் வுற்றூர்
மைந்தருங் கல்வி கேள்வியி லுயர்ந்து மாண்புறுங்
குணஞ்சிறந் தனரே 9

தந்தையுந் தாயுந் தம்முடை மகற்குச் சார்ந்துள
கல்வியின் வலியும்
வந்தநற் குணத்தின் வளமையும் நோக்கி வன்றவத்
தீன்றநாள் தனிலும்
இந்தநாள் தனிலே யேற்றமா மகிழ்ச்சிக் கிலக்கிய
ராகவே வாழ்ந்தார்
மைந்தரா மிவரும் வளர்பிறை போல மகிழ்வொடு
வளருவ தானர் 10

அவத்தையுங் கலையும் அருங்குண மாண்பு மடைவுடன்
வளருநா ளதிலே
பவத்தைவே ரறுக்கும் பரவுணர் வடையும் பக்குவ
மீக்கொள வதனல்
தவத்தினிற் சிறந்த சற்சன ருறையுந் தனியிடஞ்
சார்ந்தவர் மொழியால்
சவத்தைநே ருடலின் நசைமுதல் மாற்றித் தற்பர
மாவதில் விழைந்தார் 11

இத்தகைச் செயலை யின்றவர் நோக்கி யிழிவுடைப்
பிறப்பினை மாற்றும்
உத்தம மகனே மகனெனத் தக்கான் உண்மையு
முறுதியு மதுவே
வித்தக ஞானம் விளங்கிய மகனே வீடுபெற்
றுயர்ந்தவ னுவான்
அத்தகை மகனு லனைவரும் வீடு பெறுவரென்
றகமகிழ்ந் திருந்தார் 12

அருமறை முடிவும் ஆகம முடிவு மடைவுட னறிந்தமே
லவனுய்த்
தெரிவரும் பொருளைச் சிந்தையி லுணர்ந்து
செப்புரைக் கதிதவாழ் வினனுய்க்

கருவரு பிறப்பைக் கழலடைந் தவர்க்குக் கழற்றிடு
மகிமைமிக் கவனு
யொருபெருங் குரவ னெங்குள னெனவே யோர்ந்துமே
தேடுத லுற்றூர் 13

தேடியே பன்னுள் திரிந்தலுத் தெய்த்துத் தீவிர தரவயி ராகத்
தோடிய சுகர்போ லுலகெலாஞ் சுற்றி யுபரதிக்
கவதியு முற்றூர்
நாடிய பொருளை நவையறத் திகழ்த்தும் நற்குரு
பரனெரு மொழியால்
வாடியே னலைவை யென்றெரு மொழிதான் வானிடை
யெழுந்ததை யன்றே 14

காவினஞ் சூழுங் கழனியும் வாவிக் கரைகளுங் கன்னலுந்
தெங்கும்
மேவியே வாழுங் குயில்மயில் பூவை மிளிர்கிளி விலங்கினம்
யாவுங்
காவியங் கண்ணி மேவிய பாகன் கழலிணை சூடிநற்
பொருளைக்
கோவிலூர் சென்று மேவிடு மென்றே குறித்தனர்
தவத்தினர் பல்லோர் 15

கொற்றவா ளீசர் திருநெலை யருளைக் குறைவறப் பெற்றுயர்
திறலோன்
நற்றமிழ் ஞான சம்பந்த ராதி நால்வரை யொத்திடு
முரவோன்
குற்றமுங் குணமுங் கருதிடா துயர்ந்த குருசுக ரொத்திடு
துறவோன்
நற்றவ ஞான முத்திரா மேச நாயகன் வாழ்பதி யதுவே 16

ஆதன சித்தி யடைந்தயோ கியரு மருமையாங் கருமயோ
கியரும்
சாதன சித்தி யடைந்த மாதவருஞ் சாற்றரும் பக்தியோ
கியரும்
நாதன சித்தி யடைந்தயோ கியரும் நோக்கரும் ஞானயோ
கியரும்
மாதன மெனவே கோவிலூர் சென்று மடமதி லுறைகுவர்
தினமே 17

அத்தகை மாண்பு அதனுக்கு வாய்த்த தானந்த பரவச
னுகி
வித்தக ஞான விலோசனன் வேத வேதாந்த முழுதுணர்
முதல்வன்



முத்தனும் முத்தி ராமதே சிகனும் முதுமைசேர் ஞானசா
தனர்க்குச்
சித்தமாம் பொருளைச் செங்கையிற் கனிபோல் தெருட்டிவீற்
றிருந்தமை யாலாம் 18

சித்திமுத் திகளைச் சிடருக் களித்துச் செகதலம் புகழவீற்
றிருந்த
முத்திரா மேச முதல்வனங் கழலை மொய்ம்புடன் சூடுநற் சிலர்
நித்திய அருணை சலமுனி வரரும் நிகரருங் கருணைமா
நிதியென்
சத்திய ஞான சிதம்பர மோன சற்குரு இருவரு மாமே 19

சிதம்பர ஞான தேசிகர் பாலே சிரவண மாதிய பெற்றுப்
பதம்பெறும் ஞானம் பக்குவர்க் கருளும் பான்மைசேர்
சிவன்முத் தருமாய்த்
திதம்பெறு ராம சாமிதே சிகருந் தேவதே வெனத்திகழ்
கின்றூர்
நிதமவர் சரணம் நேடிவந் தடைவார் நித்திய முத்திசேர்
குவரே 20

என்றுமே பல்லோ ரியம்பிய மொழியை யெழிலுறு
செல்லப்பர் கேட்டுக்
கன்றுதா னீன்ற கறவையை நாடிக் கதறியே சென்றுறும்
முறைபோல்
நன்றிதே நமது வாழ்க்கையு மென்று நவின்றுமே
கோவிலூர் சென்று
வன்றவ ரிருக்கும் மாதவச் சார்பும் மடாலயச் சிறப்புநோக்
கினரே 21

தேவர்கள் தேவன் உறையுமா லயமுஞ் சிற்பர சொருபநேர்
முனிவர்
தாவிலாப் பதத்தை யடைந்தபின் னுடலைச் சமாதிசெய்
துறுமிடம் பலவும்
மேவியே, நோக்கி வேதவே தாந்த வித்தக ஞானமே பயின்று
ஓவிலா தொழுகுஞ் சாதுக்கள் தமையும் ஒருமையாங்
கருத்துடன் பார்த்தார் 22

வேதநூல் மிருதி அங்கமீ மாம்சை விதவித புராணகா
வியமும்
போதய னரியும் புராந்தகன் முதலோர் புகன்றிடு கீதையும்
ராமர்க்

கோதிடு நூலும் உரைப்பவர் கேட்போ ருணர்பவர்
தம்மிடை யுயர்ந்த
ஆதன மீதி லமர்ந்துநற் கரத்தா லயிக்கிய வபிநயங்
காட்டி 23

சிதவாண் முகமும் தென்திசை நோக்கித் திகழ்ந்திடுங்
குருவினைக் கண்டு
வேதநா யகனே விண்ணவர்க் கிறையோ வேதனைப்
பயந்தமால் தானே
போதனே ஞான பூபதி யென்று புனிதநன் மனதினு
லுணர்ந்து
நூதன மான கனிமலர் கொண்டு நொடியினிற்
சரணடைந் தாரே 24

சூடினர் பாதம் துணைமலர்க் கரத்தாற் சூட்டினர்
புனைமலர் மாலை
பாடினர் வாயாற் பரிதவித் தழுதார் பார்மிசை
மீண்டும்வீழ்ந் தெழுந்தார்
ஆடினர் அலக்கண் அழிந்ததென் றுரைத்தார் ஆனந்த
பரவச ராகி
நாடினர் சூழ்ந்தார் நாயக னருளால் நானென்ப தறுத்தன்
ரன்றே 25

சோதியே சுடரே சோதியுட் சோதி தோன்றுருத்
துணையதா யமர்ந்த
பாதியே சத்தே பரம்பர வின்பே பாவன எந்தையே பரனே
நீதியே செல்வக் கழனியில் வாழும் நிமலனே யெம்பெரு
மானே
ஆதியே யென்னை யாண்டருள் கண்ணே யடைக்கலம்,
நின்சரண், சரணே 26

பாவன ஞானம் பண்ணிய பரனே பதமலர் சூடுநற் சிடர்க்
காவன செய்யும் ஆனந்த குருவே அடியனை யாண்டருள்
புனிதா
தேவனற் றேவே தேசிக மணியே சிற்பர ஞானபா ரகனே
யாவையுந் தானும் அத்வைத ஞானம் அடைவுட
னீந்தருள் வாயே 27

கண்ணினன் மணியே காரண குருவே கழலிணை
யடைந்தமா தவர்க்கு
எண்ணிலா ஞானம் அளித்தருள் வோயே யீசனை
யென்னுளே காட்டி

புண்ணிய ஞான பூமிகை முறையே பொருந்திடத் திருவடி
சூட்டித்
திண்ணிய ஞானந் திகழ்ந்திடச் செய்வாய் தேசிக
ராமனே போற்றி 28

போற்றியே ராம சாமியென் குருவே பூரண
புராதன சொருபம்
சாற்றியே நாளுஞ் சாதனர்க் கருளும் தண்ணருள்
முனிவனே போற்றி
ஆற்றொணுக் கொடிய சென்மவெங் நோயை
யடியவர்க் ககற்றுவாய் போற்றி
கூற்றினைக் கடக்கும் ஞானமே தந்து குறைவறச்
செய்குவாய் போற்றி 29

என்றுமே போற்றி பிறைஞ்சிய சிடன் இயற்கையுங்
குணமுமே நோக்கி
நன்றெனக் கருதி நான்மறை யந்தம் நவின்றமா
வாக்கியந் தந்து
என்றுமெவ் விடத்து முடம்புறு ஞான மெய்துக
விவர்க்கென வெண்ணி
சென்றுநீ யுறுக அடியவர் குழுவில் செல்லப்ப
என்றனர் குருவே 30

குருமொழி சிரமேற் றூங்கியே மடத்திற் குருபத
முற்சரண் புகுந்தோர்
திருமொழி யாலும் சிந்தித்தல் தெளிதல் தெளிவுறு
நிட்டைநன் ஞானம்
மருவுறப் பெற்று மாதவ மணியாய் வதிந்தனர்
செல்லப்பர் குருவின்
கருணைநற் பணியிற் கருத்தின ராகிக் கணமும்விட்
டகன்றிடா தன்றே 31

உடம்பினை யுயிர்தா னெங்ஙனே போற்றும் ஒளிபெறு
கண்ணினை யிமைதான்
கடனுறப் போற்று மெங்ஙனே யதுபோற் கருணைநற்
குரவனைப் போற்றி
திடம்பெற ஞான நூல்பல கற்றுத் தேசிகத்
திறமையும் பெற்றங்
குடனுறைந் துற்றூர் குருபர னிழல்போ லோங்கிய
செல்லப்பர் தாமே 32

இவ்வகை யாக வாழ்ந்துறு நாளில் இறைதிரு
வருள்வலி யாலே
செவ்விய குருவாம் ராமசா மிப்பேர்த் தேசிகர்
பரபதம் பெறவே
அவ்வயின் நாளும் செய்வன செய்து அகற்றினர்
பலவரு டம்பின்
திவ்விய மூவர் பாடல்கள் பெற்ற க்ஷேத்திரம்
நோக்கயே கினரே 33

சாக்கைமா நகரி லுறைந்திடும் புனிதர் சற்குரு
செல்லப்ப தேவர்
பாக்கிய மென்ன எங்களுக் கறங்கள் பயிற்றிடும்
நூல்பல வோதி
ஊக்கிய எங்கள் குலநல மோங்க உன்னத பதவியும்
பெறவே
நோக்கியே வருவா யென்றுமே வேண்ட நுணுகிய
தவருமே நேர்ந்தார் 34

ஆங்கவர் வேட்ட அரும்பெரு நூல்கள் அடைவுட
ஞேதியே சின்னுள்
பாங்குற வமர்ந்தார் பின்பொரு காலம் பாவன
வாதவூ ரடிகள்
ஓங்கிய குருவை யுவந்தடைந் துயர்ந்த உத்தமப்
பெருந்துறை யடைந்து
தாங்கொணு மகிழ்வு பெற்றுமே யங்குச் சார்ந்தனர்
சற்குரு தானே 35

திருத்தமா யங்குச்சிவனடி போற்றுஞ் சிறப்பினர்
பலருமே வந்து
கருத்துட னிவரைக் கனமுறப் போற்றிக் கருதிய
நூல்பல கற்றுர்
விருத்தரும் புனித வேதியர் பலரும் விரும்பிய
ஞானம்வந் தடைந்தார்
திருத்தகு ஞான செல்லப்பர் மீண்டும் க்ஷேத்திரம்
நோக்கயே கினரே 36

நோக்கிய பதிகள் தோறும்வந் தடைந்த நுண்ணிய
வறிவினர்க் கறங்கள்
ஊக்கிய நூல்கள் நீதிநூல் புராணம் உயர்ந்தவே
தாந்தநூல் பலவும்

தாக்கற வோதிச் சமாதிநிட் டருமாய்ச் சார்ந்தனர்
தகுமத வாதர்
பாக்கிய மென்ன வந்தவித் தவர்பால் பான்மையாய்
நயந்துமே வினரே 37

தர்க்கவே தாந்த சரபமாய் விளங்குஞ் சற்குரு
செல்லப்பர்க் கண்டு
பக்குவர் பலரும் பக்குவ மிலாரும் பதம்பெறு
கருத்தின ராகித்
தொக்கவே சுருதி யூகமு மதற்குத் துணைபெறு
மனுபவம் மூன்றும்
தக்கதாக் கூறும் இவர்தமை விடாமற் சகலருஞ்
சரணமடைந் தாரே 38

வந்தமா தவர்க்கு மகிமையை யோர்ந்தோ
மறைப்பொரு ளிதுவெனத் தேர்ந்தோ
தந்தையி னுமம் சற்குரு நாமம் தனிப்பட
வுரைத்திடக் குறித்தோ
எந்தநாள் நேரந் தனிலுமே ராம நாமத்தை
யிடையறு துரைப்பார்
சந்தன வரையோன் தமிழ்மொழி நூலைத் தடையற
எவர்க்குமோ துவரே 39

திருத்தமாய்த் தலங்கள் மூர்த்திகள் தீர்த்தம்
செகமதில் விநோதமாய் நோக்கிக்
கருத்தினிற் சமாதி கணமுநீங் கிலராய்க் கண்ணுதல்
கைலைமால் வரைநேர்
விருத்தமா சைலந் தனிலுறை தேவை விதவித
மாய்த்துதி செய்து
பொருத்தமா யங்கு பொருந்துமா ணவர்க்குப்
பூரண போதமீந் துவந்தார் 40

நன்னய மான செல்லப்ப தேவர் நாடொறு மிவ்வகை
யமர்கால்
கன்னல்வே ளெரித்த கண்ணுதற் பரமன் கவின்பெறும்
ஆன்மிசை யுமையோ
டுன்னதமான காட்சியு மளித்து வும்பரு மிம்பரும் வாழ்த்த
மின்னல்போல் தோன்றி மறைந்தனர் யாரும் வியப்புறப்
பழமலை நாதர் 41

இன்னவா றீச னெழிலுறுக் கண்டு இயற்கையும்
செயற்கையும் நிறைந்து
உன்னத மான சமாதியி னித்தம் உறைந்தனர்
செல்லப்ப முனிவர்
தன்னலங் கருதும் சிடர்கள் வந்து சமாதியில்
பகிர்முகப் படுத்தி
யின்னல்க ளகற்றும் நூல்பல இரந்தனர் அதற்குள
மகிழ்ந்தே 42

பன்னெடு நாட்கள் பக்குவர்க் கருளிப் பத்தியு முத்தியுந் தந்து
கன்னலுந் தேனுங் கனியொடு பாலும் கலந்தன
சொற்பொழி வாற்றச்
சென்னெலார் வயல்சூழ் செகதலத் துள்ளோர்
சென்றுசென் றுவந்துநோக் கினராய்
நன்னய மான பதமலர் சூடி நாடொறும் வந்துவந் தாரே 43

இத்தகை யாக விருத்தநற் கிரியில் இயற்றியே குருபர
ருறைநாள்
முத்தலம் புகழும் தஞ்சைமா நகரில் முழுமுதற்
பரமனை நாடிச்
சித்தியும் புத்தி முத்தியும் பெற்ற சித்தர்பால்ச் சாமிநன்
மடத்தில்
வித்தக ஞான தேசிக ரொருவர் வேண்டுமென் றிவரைவந்
தழைத்தார் 44

அழைக்கவே வந்த அரும்பெருந் தனர்க்கும் ஆறிய சாதுமா
தவர்க்கும்
தழைக்குநன் மொழியாற் சாந்தமாய் வருவேன் சாருமின்
நகர்க்கென வுரைத்துக்
கழைக்கணின் முத்தங் கதித்திடுங் தஞ்சைக் கவின்பெறும்
மடமதி லுற்றுத்
தழைக்குறும்வேத முடிவினை ஞானஞ்சார்தர வடியவர்க்
குரைத்தார் 45

உரைத்துமே யங்கண் உறைந்துறு நாளில் உயர்பெருந்
தனர்பலர் வந்து
தரைப்பெருந் துறவோய் தஞ்சைப்பால்ச் சாமி தனிமடஞ்
சிறப்புற வமைக்க

42 இயற்கை = துறவு, மெய்யுணர்வு, அவாவின்மை.
செயற்கை = மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை.

வரைப்பெருந் தனம்நாம் வழங்குதுந் தாங்கள் வளமையாய்ப்
புரிந்திடல் வேண்டும்
நிரைப்பெருந் தவத்தர் நிறையவந் துறைய நிமலதே
சிகபரா வென்றூர் 46

ஆங்கவ ருரையை யடைவுடன் கேட்டு அரும்பெருஞ்
செல்லப்ப தேவர்
ஓங்கிய தவத்த ருறைவதற் கேற்ற வொப்பிலா மடமதை
யமைத்துத்
தாங்கருந் தவத்தர் சற்சனர் தமக்குச் சாந்திசேர் பாடங்க
ளோதி
நீங்கருஞ் சமாதிநிஷ் டாபர ராகி நிதமிதம் பதம்பெற
வமர்ந்தார் 47

ஈங்கிவ ரிவ்வா றமர்ந்துறு நாளில் இயல்பதாய்ப்
பணங்குணம் நிறைந்தோன்
ஓங்கிய தேவ கோட்டையி லரசா யுன்னத பதவியி
லமர்ந்தோன்
பாங்குறுஞ் சாலை சோலையக் ராரம் பதம்பெறு சத்திரம்
நிறைத்தோன்
தாங்கருந் தவமுங் கலைகளுங் கற்றுச் சாதன சதுட்டய
மடைந்தோன் 48

கங்கையு மரவுந் திங்களும் புனைந்த கதிர்முடிக் காளி
யீசர்க்குத்
தங்குறக் கருங்கல் ஆலய மமைத்துத் தடமதில்
விமானகோ புரமும்
தங்கமா ரிடப மாதிவா கனமும் தகையறு காலப்பூ
சைகளும்
சங்கையில் மனத்தா லியற்றிய பெரியோன் சற்குணக்
கடலெனச் சிறந்தோன் 49

பத்தியை யீசன் தன்கணே வைத்தோன் பரமகா
ருண்யத்திற் சிறந்தோன்
சத்தியந் தானம் தயைபொறை யடக்கம் சாதுக்கள் நேயமு
மிகுந்தோன்
ஒத்துயர் சித்த நேர்மையு முள்ளோன் உரிமையும்
பெருமையும் வாய்ந்தோன்
மெத்திய அருணா சலமெனும் நாமன் மேதினி புகழ்தரு
சீமான் 50

---

46 நிரை = ஒழுக்கம்.

அத்தகை வணிகர் குலநல திலகன் அகம்புற ஆய்வினை
லோர்ந்து
தத்துவ ஞான மொன்றினு லன்றிச் சங்கடப் பிறவிநீங்
கரிதாம்
வித்தக ஞானம் உளங்கையிற் கனிபோல் விரைவினிற்
றருகுரு பரன்யார்
எத்தலத் துள்ளா னென்றுமே நோக்கி யிருந்துசா
வினன்பல காலே. 51

அருமறைக் கிழவர் அரியநூல் கற்ரோர் ஆரியத்
தன்மையிற் சிறந்தோர்
திருமுறைக் குரியோர் சிவனடித் தொண்டர்
தேசதே சாந்தரந் திரிவோர்
ஒருவரு மொழியா துசாவியே யுறைநாள் ஒருவர்போ
லனைவரும் சொன்னர்
திரிபுவ னத்து மில்லைநம் குருவாஞ் செல்லப்ப
தேவர்போ லென்றே 52

சிற்பர தேசி கேசர்வாழ் தஞ்சை சிக்கிரஞ் சென்றுநீ யுற்ருல்
விற்பன விவேக விரத்தர்கள் புகழும் விமலமாம்
ஞானம்நீ பெறுவை
சொற்பதங் கடந்த தூயமெய்ஞ் ஞான சோதியாய்
விளங்குவை யென்றே
பற்பல ருரைத்த பண்பினைக் கேட்டே பணிவுடன்
தேடியே சென்ருர் 53

பரிவுடன் சென்று பரமசற் குருவின் பதமலர்
கையடை யோடு
திரிகர ணங்கள் சுத்தியாய் வணங்கித் திரிவித
பதார்த்தமு மீந்து
அரிபிர மாதி தேவர்க்குந் தேவாம் ஆரிய சற்குரு நாதா
பரிவுட னெனையுன் பதமலர் சேர்த்துப் பாவன
மாக்கலுன் கடனே 54

என்னையெற் களித்து இருவினை களைந்து ஏழையை
யீடேற்றல் வேண்டும்
அன்னையுந் தந்தை யையனு மானுய் அடியனே
னுரையினி யுண்டோ

தன்னைத்தா னளிக்குஞ் சற்குரு வள்ளல் தமையன்றி
யுலகில்வே றறியேன்
பின்னைத்தா னென்னு தின்றெனக் கருளிப் பேரின்ப
மாக்கிடு வாயே 55

என்றுபற் பலவா யிசைத்துள சீட னியற்கையுங்
குணமுநன் கோர்ந்து
தன்றனி மனத்தி லிருந்துள ஞான சமர்த்தினு
லருளினுல் யோகால்
வன்றவ வலியால் வாக்குவல் லபத்தால் மாசறு
மிவனையா ளாக்கல்
என்றனக் கியலு மென்றுதா னினைத்து ஏற்புடைக்
குலநலங் கேட்டார் 56

அடைவுட னுரைத்த குலநல நோக்க மனைத்தையு
மனத்தினி லோர்ந்து
தொடர்ந்தமும் மலமும் பந்தபா சங்களுந் துவக்கறத்
துடைத்துயர் வாக்கால்
கடந்திட வரிய பவக்கடல் கடத்தும் கருணைமா
வாக்கிய முரைத்துத்
திடம்பெறு ஞான தீக்கையும் புரிந்து தேற்றினர்
செல்லப்ப தேவர் 57

அருமையாங் குணத்தரு ணசல வணிக அடைவுட
னருளினம் ஞானம்
தெருள்வலி மனத்தாற் சிவபரஞ் சுடரைத் தெளிவுறக்
கண்டவித் தகர்பால்
ஒருசில நாட்க ளுறைந்துபின் னுன்ற னுயர்பதி
தனக்குநீ செல்க
கருவுறு துயர மின்றுநீ யகன்ருய் கதியெங்கு
வுறையினும் வருமே 58

வானதின் மேகம் வரையறக் கூடி வழங்கினு மிடிமின்ன லாதி
வானதற் கென்றும் வசைநசை யுளவோ வாடியே
நைந்துறுங் கொல்லோ
ஞானநற் பொருளே நானெனத் திடமாய் நண்ணிய
ஞானியெத் தொழிலும்
ஊனமற் றுலக நலமதின் பொருட்டா லுஞற்றினும்
அவர்க்கிலை பழியே 59

பிரமமே தானுய்ப் பேதமில் நிட்டை பேணிய ஞானிகள் தமக்கு
அரியன வுலகில் யாவது மில்லை யவற்றினு லொன்றுமே யில்லை
திரிபுவ னத்துந் திரியநீ யுரியை சிவநன் முத்தனு மாவாய்
பெரியவ னென்னும் பெருமையோ டுற்றுப் பெரிதுநாள் வாழ்ந்திடு வாயே 60

என்றுமே வாழ்த்தியருளினுர் ஞான ஏந்தலாஞ் செல்லப்ப தேவர்
நன்றெனக் கூறி ஞானமார் சாது நடுவுணின் ருர்சில காலம்
தன்றனக் காசான் உரைத்தநன் னிலைகள் தன்னிலே வரமிகத் தெளிந்து
சென்றுநல் லாசான் திருவருள் தாங்கித் திரும்பினர் தன்னகர் தனக்கே 61

சிற்பரம் பொருளே செகமென நோக்கித் தேவகோட் டையில்மிக வாழ்ந்தார்
தற்பர ஞான வேந்தர்கள் புகழும் தவராஜ செல்லப்ப குருவும்
அற்புதஞான விநோதராய்த் தஞ்சை யரும்பதி யமர்ந்துறு நாளில்
பற்பல தேச மாந்தர்கள் வந்து பரவுணர் பெற்று வாழ்ந்தனரே 62

பண்ணவர் முனிவர் விஞ்சையர் பரவும் பாவன மதுரைமா நகரில்
மண்ணவர் பலரும் வணங்குதற் குரிய மகிமைசே ரங்கையற் கண்ணி
கண்ணுதல் சோம சுந்தரர்க் குரிய கவினுறு மாலய மியற்றிப்
புண்ணிய மான பரபத முற்ற பூரணன் குட்டைய சாமி 63

கண்ணிய மான முத்திரா மேசன் கழலிணை சூடுநற் சிலன்
எண்ணிலாக் கல்வி கேள்வியி லுயர்ந்தோ னியற்கையுஞ் செயற்கையும் வாய்ந்தோன்
திண்ணிய ஞான சிவன்முத் தனுமாய்ச் சீடர்களுறைவிட மமைத்தோன்
எண்ணிய காலம் தேவியி னருளால் இன்பமார்ந் திலங்கிய சீரோன் 64

அத்தகை மாண்பு நிறைந்திடு பெரியோன் அமைத்திடு
மடமதி லுயர்ந்த
மெய்த்தவ ஞான விராகத்திற் சிறந்த விமலனுங்
கண்ணப்ப குரவன்
பொய்த்தவ மில்லாப் புனிதர்க்குப் பன்னுள் பூரண
போதமே யோதிச்
சித்திர மாக மடமதை விருத்தி செய்துமே வாழ்ந்திடு
புனிதன் 65

செய்தவ ரெல்லாஞ் சிடராய் வாழத் திகழ்பரி பூரணமாகிக்
கைதவ மொழித்த மெய்தவ ரடையுங் கைவல்ய
பதமதை யடைந்தார்
செய்தவம் மடத்தைச் செவ்விதினடத்தச் செல்லப்பகுரவரே
வேண்டும்
மெய்தவர் சென்று கொணர்மினென் றுரைக்க விற்பன
ரங்கனே கொணர்ந்தார் 66

ஆன்றவர் பலரும் ஆய்ந்துணர்ந் தவரும் அரும்பெருங்
கல்விமிக் கவரும்
சான்றமெய்ஞ் ஞான சத்துக்கள் பவருஞ் சற்குரு
செல்லப்பர் தமையே
தோன்றுமிம் மடத்தின் தோன்றலா யமரச் சொற்றன
ரம்மொழி யேற்றுப்
பூன்றவம் மடத்தின் பூரண வுரிமை பூண்டுமே நடத்தின
ரன்றே 67

சாற்றருங் கல்வி கேள்வியில் வலியோர் சற்சனர் தவமதிற்
சிறந்தோர்
போற்றருங் கரும யோகதிற் பொலிந்தோர் பூரண பத்தியி
லுயர்ந்தோர்
மாற்றறு ஞான மோனமும் வாய்ந்தோர் மகத்துவ
சமத்துவப் பெரியோர்
ஆற்றலில் மிக்கோ ரனைவரும் வந்து அரும்பெருஞ் சிடரா
யினரே 68

கான்றசோற் றதனிற் கண்டுல கின்பைக் கடந்துள
துறவிகள் தமக்கு
ஈன்றதா யெனவே பொழிலுற வணைத்து மியற்றிடு சற்குரு
நாதத்

தோன்றலாம் ஞான செல்லப்பதேவர் சுருதிநூல் நெறிவழு
வாமல்
தான்றனிற் றெளிந்து சமாதிநீங் கிலராய்ச் சார்ந்தனர்
சிலபொழு தாங்கே 69

இத்தகை யான வியல்பினைக் கேட்ட வின்புறு சிடரிற்
சிறந்தோன்
நத்துறுங் கழனி சோலைகள் சூழ்ந்த நறுங்கடி தேவகோட்
டையில்வாழ்
சித்தனு மருணுசலமெனு நாமன் செல்வர்வாழ் காணப்பே
ரூரில்
சத்திரந் தரும சாலைக ளமைத்தோந் தண்பொழிற்
றடாகங்கள் கண்டோம் 70

கோவிலுங் குளமுங் குறைவற வமைத்தோம் கோமடங்
கோலமா மடமும்
தாவிலாப் பாடசாலைகள் பலவுந் தகுதிரு நீற்றுமா மடமுஞ்
தேவர்கள் போற்றுந் திருமூலர் மடமுஞ் சித்தாந்த
மடமுமே யமைத்தோம்
நாவலர் மகிழ நறுமறை முடிவாம் நன்மட மமைத்திட
வேண்டும் 71

அமைத்துமே யத்தி லாரிய ரான ஆண்டவர் செல்லப்பர்க்
கொணர்ந்து
இமைப்பொழு தகலா திருக்கவே யமைத்திங்கென்று நாம்
போற்றுதல் செய்ய
நமைத்தினம் நோக்க நாமவர்ப் பார்க்க நாடிய
தொண்டர்கள் வாழ
எமக்குமுன் வேண்டு மென்றசங் கற்பம் இருந்ததால்
இயற்றுவ னென்றூர் 72

செந்நெல்கள் செழித்த கன்னலை யொக்குந் தேன்பொழி
மதுரமே மிக்க
கன்னல்கள் வளர்ந்த கமுகினை மானும் கமுகது
தெங்கினை நிகர்க்கும்
தன்னிகர் தென்னை விண்ணுறை மீனைத் தடவிய
கானப்பே ரூரைப்
பன்னல நாவார் சேடனே யன்றிப் பார்தனி லார்கோலோ
நவில்வார் 73

சிலமார் சிகர கோபுர மனேகம் சிவனுறை கோவில்க
ளனந்தம்
ஏலவார் குழலி யுமையவ ளிருக்கு மெழிலுறு மாலயம்
பலவாம்
மாலயன் முதலாம் வானவ ரிருக்கும் மகிமைசேர்
பதிகள்பற்பலவாம்
காலமூன் றுணர்ந்த யோகிகள் வாழுங் கவின்பெறு
மடங்க ளெண்ணிலவே 74

இருக்கெசுர் சாமஅதர்வண கமங்க ளியம்புறு பாடசா
லைகளும்
திருக்கறு விபூதி கோலகுங் கிலியங் திருமுறை நிருத்தன
மடமும்
அருக்கமி லறுபான் மூவர்தம் மடமும் ஆமடம்சித்தாந்த
மடமும்
பெருக்கம தான ஆனைகன் மடுவும் பெருமையா மையமண்
டபமும் 75

மறையவர் தெருவும் மன்னவர் தெருவும் வணிகர்வே
ளாளர்தங் தெருவுங்
கறையடிக் களிநல் யானைமண் டபமுங் கவனவாங்
குதிரைச்சா வடியும்
நறைமலர் கமழும் நந்தன வனமும் நறுமலர்க் கமலவா
விகளும்
நிறைநிறை யாக வமைந்துள கானப் பேர்நகர்
நேர்மையென் சொல்வேன் 76

கற்பக தருவும் மகரதோ ரணமுங் கவின்பெற வமைந்துள
தான
அற்புத மான நாகர்கோ னுறையும் அரும்பதி யெனமன
மயங்கப்
பற்பல வளமும் நிறைந்தமா நகரில் பரனுறை யாலய
மருங்கில்
உற்பவ மறுக்கும் யானைதன் மடுவின் உயர்கரை
விசாலமா மிடத்தில் 77

தேவகம் மியனே திருமிகு மயனே செகதலத் துள்ளசிற்
பிகளோ
யாவரைக் கொணர்ந்தோ நவநவ மாக ஆக்கின
னென்றுதா னுரைக்கக்

காவல தானமதில் களுங் காண்பார் கண்ணினைக் கவருமா
ளிகையும்
நாவலர் புகழும் விமானகோ புரமும் நன்மாட கூடங்கள்
பலவும் 78

பதுமவா லயத்தி லமர்ந்திடு பிரமன் பகர்சபை யெனமிளி
ருதலால்
புதுமைசேர் பிரம சபையென விளங்கும் பொற்பமை
தனியிட மதுவும்
மெதுவதாம் சொல்லும் நடையுமே யுடைய மேலவர்
வதியுநல் லிடமும்
புதியதாய் வந்த சாதுக்க ளுறையப் பொன்னறை
களுந்தனி வகுத்தார் 79

ஆண்டவர்க் காண வடைந்திடும் மனிதர் அமர்ந்திட
வசதியா மிடமும்
வேண்டிய பண்டம் வைத்திடற்குரிய. விதவித
அறைகளுஞ் சமையல்
பூண்டிடு மிடமும் போஜன இடமும் பூஜையாம்
பசுவின்சா லைகளும்
காண்டகு மடியார் சமாதியா மிடமும் கனம்பெற
நன்கமைத் தனரே 80

அமைத்திடு மருண சலவணி கருமெய் யடியரும்
அருந்தனர் பலரும்
இமைப்பொழு தினுமென் னெஞ்சைவிட் டகலா
திருந்திடு கயற்கணி வாழுஞ்
சமைப்பரும் வளங்கள் பலநிறை மதுரை சார்ந்து நம்
குரவரை யடைந்து
எமைப்புரந் திடவே கானப்பேர் வருக என்றுமே
யழைத்திட நேர்ந்தார் 81

அத்தகை யான மாணவர் வேட்கை யடைவுடன்
முடித்திட வேண்டிச்
சித்தனும் ஞான செல்லப்ப குருவும் திருவுள
மகிழ்ந்தினி துற்றார்
முத்தர்கள் பலரும் முன்பின யுறவெ முறைமையாய்க்
கீழ்த்திசை நோக்கி
வித்தக ஞான விநோதரும் வந்தார் வேண்டின
சூழ்ந்திடத் தானே 82

பூமணஞ் சூழ்ந்த சோலையின் வளமும் புதுமணங்
கமழுநீர் வளமும்
காமணஞ் சூழ்ந்த கழனியின் வளமும் கருமணஞ்
சூழ்ந்திடு நெறியும்
தாமணஞ் சூழ்ந்த தோரண மறுகுந் துதைமலர்
நிறைந்தகா வணமும்
பாமணங் கமழ்ந்த கானப்பேர் நகரில் பவனிசூழ்
வந்தனர் குரவர் 83

பூரண கும்பம் நிறைத்துநற் றெருவில் பொற்குலைக்
கதலிகள் நாட்டித்
தோரணம் வீதி தொறுநிறை வித்துச் சுகந்தமா
லைகள்பல தூக்கி
யேரணி தீப மெங்கணு மேற்றி யிசைபல நிறைந்தவா
வணத்தில்
காரண குரவர் பவனிபோங் துவந்து கனம்பெறு
மடமதிற் புகுந்தார் 84

தேவர்கள் தேவன் சிதம்பர நாதன் சிற்சபை தனி
லமர்ந் ததுபோல்
மூவர்கள் பாடுங் கானப்பேர் மடத்தில் முதற்குரு
வாயமர் வுற்றுர்
தேவர்பூ மாரி பொழிந்தனர் திக்கிற் செறிந்தவர்
பாமலர் பொழிந்தார்
யாவரும் வந்து பரம்பரற் போற்றி ஆசிகள் பலவழங்
கினரே 85

இவ்வகை யாக ஆசிகள் ஏற்றங்கி லங்கிய செல்லப்ப
தேவர்
செவ்விய சிடர் பற்பலர் தமக்குச் சித்தாந்த
வேதாந்தஞ் செப்பி
மைவலி மாயை அஞ்ஞானங் தனக்கு மாருத
பானுவா யமர்ந்தார்
கைவரு சிடர் கரமணி போலக் கருதிடு சொரூபரா
யமர்ந்தார் 86

---

86 மாயை – தனக்கு = மாயா மேகத்தை நிவர்த்திப்பதற்கு. மாருதமாய் = பிரசண்ட மாருதமாயும். அஞ்ஞானங் தனக்கு = அஞ்ஞான அந்தகாரத்தை நிவர்த்திப்பதற்கு. பானுவாய் = ஞானசூரியனுயும்.

ஆண்டசற் குருவின் அடிமுடி சூடி ஆத்துமா னந்தரச்
சுதரே
காண்டகு காட்சிச் சதாசிவ முனிவர் கருதருஞ் சிதம்பர
முனிவர்
மாண்டகு பெருமா ளெனும்பெரு முனியும் மகத்துவ
முத்தைய முனியும்
தூண்டகு பொன்னம் பலமுனி வரரும் சுப்பைய நாரண
முனியும் 87

சகத்தினிற் பெரிய சாக்கைநாரணரும் தத்துவ வேங்கட
முனியும்
மிகத்தெளி வேலா யுதமுனிவரரும் வித்துவமுத்துவேல்
முனியும்
வெகுத்துவ மான சிதம்பர சாதும் விரத்தராம் கிருட்டின
முனியும்
சுகத்தினி லுயர்பொன் னம்பலச்சாதும் சொக்கலிங்
கப்பெரு முனியும் 88

கருதருந் தவமார் கந்தைய முனியும் காரண பழனிமா
முனியும்
சொருபமார் மாரி முத்தெனு முனியும் சுகமுத்து ராமெனு
முனியும்
அருமுரு கேச அடிகளும் ஞான அங்குமுத் தடிகளு
முயர்ந்த
திருமரு அருணசலமுனி வரரும் சிறந்திடு நாகலிங்
கருமே 89

சுயம்பிர காச முனிவரும் சகத்தைத் துறந்திடுசங்கர
முனியும்
நயம்பெறு நித்தி யானந்தமுனியும் நரர்புகழ் சபாபதிச்
சாதும்
பயம்பெறு சுப்ர மண்யமாமுனியும் பக்தியாம் சுப்பைய
சாதும்
வயம்பெறு சுகமன் சிவமெனு முனியும் மகிழ்ச்சியா
யமர்ந்தனர் மன்னே 90

பற்பல கால மிவ்வகைஞான பானுவாய்ச் சற்குரு
வமர்ந்தார்
நற்பல னுகச் சாக்கையி லமர்ந்த நறுமறைமுடிமடந்
தனக்குச்

சற்குரு முத்துக் கருப்பசா மிகளுஞ் சாஸ்வத முத்திசேர்
வுற்றூர்
சற்குரு வாகச் செல்லப்ப தேவா சார்ந்திடவேண்டுமென்
றிரந்தார் 91

சாக்கையை யடுத்த புதுவயல் நிறைந்த தனவணி கர்கள்பல
ருவந்து
ஆக்கையோ டாவி அரும்பொரு ளீந்து அடைக்கலம்
புகுந்தன ரதனை
நீக்குதற் கரிய தேசிகர் பார்த்து நிச்சயம் வருகுது மென்றூர்
பாக்கிய மென்ன அழைத்துமே சென்றூர் பாவன மடமுற
வமர்ந்தார் 92

பங்கமி லாத சிங்கவே றனைய பாவன செல்லப்ப குரவர்
தங்கிய சாக்கை மடமதிற் சிடர் தமக்குநற் பாடங்கள் கூறிப்
பொங்கிய சமைய லறைமுத லானபோசன சாலைகள்
அமைத்தார்
இங்கித மான பொருள்வளம் பலவு மெழிலுற வமைத்தனர்
தானே 93

சாக்கையி லமர்வே தாந்தமா மடமுஞ் தஞ்சைபால்ச்
சாமிகள் மடமும்
மீக்குயர் மதுரை குட்டைய மடமும் மேலவாங் கானப்பேர்
மடமுஞ்
சாக்கியா யிருந்து தனித்தனி மடங்கள் சரிவர நடக்குமம்
முறையை
நோக்கியே பன்னுள் சாந்தமாய் இருந்தார் நுணுகிய
வறிவினிற் சிறந்தோர் 94

சிலபல காலம் சென்றபின் சாந்த சிற்பர சொருப
செல்லப்பர்
சலனம தறவே சார்பெரு மடங்கள் தமக்குநற் சிடர்கள்
தலைமை
நலமுற வமைத்துக் கானப்பேர் நகரில் நண்ணியே
வீற்றினி திருந்தார்
கலைகளு மறையுங் கற்றமே லவருங் கதித்துறத்
துதித்திடத் தானே 95

சற்குண மனைத்து மகத்தினில் வாழச் சாந்தம்நோக்
கதனிலே பொருந்தக்
கற்பகங் காம தேனுவுங் கையில் கதித்துற வளர்ந்திடக்
கலைகள்

நற்குண மான நாவினில் மேவ ஞானமுஞ் சொருபமாய் நேர
நற்பத வின்சொல் வாக்கினிற் சார நம்குரு நாதர்வாழ்ந் தனரே 96

பெற்றவர் மகவைப் பெறவினி யிருப்பார் பெறுவரோ வித்தனி மகற்போல்
கற்றவர் கலையைக் கற்றுற விருப்பார் கற்பரோ விவர்கலை போல
உற்றவர் தவத்தை யுறவினி யிருப்பார் உறுவரோ விவர்தவம் போல
அற்றவர் பாசம் அறவினி யிருப்பார் அறுவரோ விவரென வாழ்ந்தார் 97

சொர்க்க மத்தியபா தலமென மூன்றுய்ச் சொற்றிடு முலகங்க ளுள்ளே
தர்க்கமா னத்தாற் தகுமறை முடிவால் சம்சய மகற்றிட வல்லார்
தக்கவர் ஞான செல்லப்ப ரென்றே தரம்பெறு சிடர்கள் நிறைய
மிக்கவர் வேத வேதியர் புகழ விகிதராய் வாழ்ந்தனர் தாமே 98

போதபா ரகராய் ஞானகா ரகராய்ப் பூரண சிவன்முத் தருமாய்
வேதவே தாந்தம் விளக்குறு முனியாய் விமலபோ தாந்தநன் மணியாய்
நாதகீ தாதி நவில்கலை வல்லோர் நாவலர் மகிழுநற் கனியாய்
சீதவாண் மதியாய்ச் செஞ்சொற்கொண் டலுமாய்ச் செல்லப்பர் வாழ்ந்தனர் தாமே 99

மாதமும் மாரி பெய்துல கோங்க வறுமைநோய் துயர்தடு மாறக்
காதலும் பயமும் கோபமு மாறக் கலியின துருவம்போய் வீழ
மாதவ தான தருமமு மோங்க மகிதலம் மகிழ்ச்சியி லாழ
சாதுபோ தனர்கள் தழைத்துமே வாழச் சற்குரு செல்லப்பர் வாழ்ந்தார் 100

வேறு

ஒன்றென் றிருப்பவர்கள் நன்று யுறைந்திடவும்
ஓமென்றுரைப்பவர்கள் தாமாய்க் கசிந்திடவும்
அன்றென் றிருப்பவர்களன்றே யகன்றிடவு மாமென்
றிருப்பவர்க ளடைவோ டமர்ந்திடவும்
நன்றென் றிருப்பவர்கள் நாளும் உறைந்திடவும் நாமென்
றிருப்பவர்கள் நாடாது வாழ்ந்திடவும்
சென்றொன்று கூறுபவர் சென்றே யகன்றிடவும் செல்லப்ப
நங்குரவர் செகமீ துறைந்தனரே 101

பொருள்கண்டு விண்டவர்கள் போதங்கள் நாதங்கள்
பொய்கண்டு விண்டவர்கள் ஏதங்கள் தோதங்கள்
அருள்கண்டு விண்டவர்க ளாகங்கள் சோகங்கள் அடிகண்டு
விண்டவர்க ளாட்டங்கள் பாட்டங்கள்
மருள்கண்டு விண்டவர்கள் மாடங்கள் கூடங்கள் மதமென்று
விண்டவர்கள் மக்களையும் மொக்கலையும்
தெருள்கண்டு கொண்டவர்கள் சிவனமும், பாவனமுஞ்
சிவமென்று கண்டுநிதஞ் செல்லப்பா வாழ்ந்தனரே 102

வித்தையொடு தத்துவமும் வேதாந்த சாதனமும் விகிதமொடு
மகிதலமு வேண்டா தகன்றவர்கள்
பொத்தையுட லத்தமொடு பொம்மலொடு விம்முதலும்
பொருமலொடு வுறுமுதலும் பொய்யென்று விண்டவர்கள்
அத்தையொடு இத்தையென அண்டமொடு பிண்டமென
அக்கமொடு பக்கமென, ஆறுஇம் நீத்தவர்கள்
சித்தரொடு பத்தர்குரு செகமோக சாலர்தொழ செல்லப்ப
நங்குரவர் செகமீ துலாவினரே 103

வேறு

கற்றவர் களிக்குங் கற்பகக் கனியாய் கதியதை யளிக்குமா
முனியாய்
மற்றவர் மனத்தில் மதிக்கறு மொளியாய் மதிப்பவர்
மனத்தொளிர் விளக்காய்
பற்றறுத் தவர்க்குப் பானுநன் மணியாய்ப் பாரத வுலகினர்
மதியாய்
நற்றவர் தமக்கு ஞானநற் சுடராய் நங்குரு செல்லப்பர்
வாழ்ந்தார் 104

வேறு

சீதள ரஞ்சித பாத சரோருக
தேவரு மஞ்சலி யோது க்ருபாகர
மாதொரு பங்குடை நாதனு மச்சுத
மாதவ னும்மலர் மேயவ னும்புகழ்
வேத மளந்துரை வேதன தத்துவ
மேலவ ருந்தொழும் மேதக வித்தக
ஆத லழிந்தவர் சாத லொழிந்தவர்
ஆரிய செல்லப்ப ஆண்டவ ரேநம: 105

ஆருட விஞ்சிய சீருடை நெஞ்சகம்
ஆறிட வென்றவ காருட மன்றவ
பாரிட வஞ்சக ரோரிட வின்றிய
பாரிட மத்தகர் நேரிட லன்றிய
ஏரிட மன்னிய வோரிட முற்றவ
ஏறிடை நஞ்சமர் வீறிட கண்டரை
நேரிடை மங்கையி னேடுறு வித்தவ
நேருறு செல்லப்ப தேசிக ரேநம: 106

கச்சணி மங்கையர் நச்சிய பொன்மகர்
கச்சக விச்சையை மெச்சிய நற்றவ
வச்சல மெய்ச்சுக நிச்சல வச்சுத
வத்துவை நத்திய அத்வித தத்துவ
உச்சக ரக்ஷக துச்சக விச்சகம்
உய்த்துணர் வித்து வொடுங்குறு வித்தவ
சச்சிக நற்சுக சத்குண வுத்தம
சற்குரு செல்லப்ப நித்த நமோநம: 107

பார கல்யாண பரம்பர விஞ்சிய
பாரக மாரக பாமன ராகவ
சீரக வாரக சிட மனோரத
சிவக பாவக தேவக மேவிய
தாரக மோரக தாவர சங்கம
சாஸ்வத மான தயாபர நெஞ்சக
காரக சூசக காமிக வாசக
காரண செல்லப்ப காருண்ய ரேநம: 108

பங்கய வெண்மலர் தங்கிய வங்கனி
பாமகள் கொங்கை நயங்கொளு மம்புயன்
அங்கை யிலங்கிய சங்கொடு சக்கரம்
அலர்மகள் தங்கிய வாகம னச்சுதன்

மங்கை யிலங்கிய பங்கொடு மான்மழு
வரதமு மபயமு மானுடை யோன்புகழ்
சங்கர விங்கித தண்பொழில் காணமன்
சற்குரு செல்லப்ப சரணம லர்க்கழலே 109

கற்கவிடர் நற்கலைகள் கற்பித்த ஜோதிநம:
நற்பரம தற்சொருப நாதாந்த போதநம:
பொற்பதும நற்சிகை பொறித்ததிரு பாதநம:
சிற்பொருளை யெற்கருளு செல்லப்ப தேவநமவே 110

அண்டர்க் கரியபொரு ளானபர நாதநம:
விண்டர்க் கரியவுரை வேதாந்த போதநம:
கண்டர்க் கரியபொருள் காட்டுகுரு நாதநம:
தெண்டர்க் கினியநல செல்லப்ப தேவநமவே. 111

சித்தமல மற்றொளிரு சிவமான ஜோதிநம:
அத்துவித முத்தியரு ளறிவான தேவநம:
பத்தரொடு முத்தர்தொழு பாதார விந்தநம:
சித்தியொடு முத்தியருள் செல்லப்ப தேவநமவே. 112

தன்னந் தனிப்பதவி தந்தபர நாதமே:
பொன்னம் பலத்தனடி புகுவித்த வேதநம:
என்னன்பு பற்றும்வகை யிசைவித்த போதநம:
சின்னம் சிதைத்தகுரு செல்லப்ப தேவநமவே 113

அல்லற் பவப்பிணி யறுத்தகுரு நாதநம:
கல்லைப் பழத்தைநிகர் கனிவித்த போதநம:
வல்லைப் பதத்தைமுடி வைத்தபர நாதநம:
செல்லப்ப தேவநம: செல்லப்ப தேவநமவே. 114

இவ்வகை யான துதிபல புரிந்து இயல்புடைச் சீடர்கள்
உறைந்தார்
கைவரு மணிபோற் கருணைநற் றுய்போற் கதியதை
யவர்களுக் கருளி
தெய்வநன் னெறியிற் றிகழ்ந்திடு குருவும் சிவநன் முத்தியி
னின்றும்
நைவதொன் றில்லாப் பரமுத்தி மேவ நாடினர் தமதுளந்
தனிலே 115

தேவர்மா முனிவ ரசுரர்வா ளரக்கர் சித்தர்வித்
யாதரர் உரகர்
மேவரு துருவர் கருடகாந் தருவர் விளங்குபன்
னிருவர்ரான் ஞெருவர்




தாவறு வசுக்கள் தகைபெறு கணங்கள் தகுதியாம்
பற்பல மேலோர்
யாவரும் விரும்பும் பதமெது தானு லயமுற்றிட
விளைந்தனர் தாமே 115

பதுமவா தனத்தி லுடலதை யமைத்துப் பனிமதி
ரவியதை மாற்றிக்
கதுமென நடுவி னுடியை யேற்றிக் கண்ணினை
லலாடத்தில் நிறுத்தி
சதுமுக னுதி யமரர்க்கு மரிய சத்துவ சேடமா மனதை
அதுவிது வென்ன வொன்றுமே யில்லா அகண்டமாம்
சொருபத்திற் கரைத்தார் 117

பூவுல கதனிற் புகல்கலி யுகத்திற் பொலியுமை யாயிரத் திருப
தாவுறு மூன்றுந் துந்துபி வருடம் ஆடியா மதியிரு
பானென்ப
தோவறு தினமாம் ஞாயிறு தன்னில் ஓரைந்து
திதியும்ரே வதிநாள்
தேவனற் சிம்ம லக்கினந் தன்னில் செல்லப்பர்
பூரண மானூர் 118

வேறு

ஆர்த்தன பல்வி யங்கள் அதிர்ந்தன மேள தாளம்
தூர்த்தனர் தேவர் பூவைச் சொரிந்தனர் கனக மாரி
கார்த்திரள் முழக்க மென்னக் கடல்கிளர்ந் தார்த்த தென்ன
ஆர்த்தியாய்ச் சனங்க ளெல்லாம் அரகரத் தொனிசெய்
தாரே 119

இன்புறு தைல மாவோ டிசைந்திடு மமிர்த மைந்தும்
அன்புறு மாவின் பால்நெய் யவிர்கனி வர்க்கம் யாவும்
நன்புனை யாரம் பூதி நலமுறு கலச நீரும்
மன்பெறு மபிடே கங்கள் வகையதாய்ச் செய்தா ரன்றே 120

ஆதன மிசையே வைத்து ஆடையா பரணம் சேர்த்துச்
சாதன மாலை சாத்திச் சந்தன மாதி பூசி
நூதன வர்க்க வன்னம் நூன்முறை நெய்வே தித்து
வேதனர்க் கான பூசை விகிதமாய்ச் செய்தா ரன்றே 121

பொற்குகை யமைத்து அத்திற் பூசுரர் வேத மோத
சற்குரு மேனி தன்னைச் சார்ந்திட வைத்துப் பல்லோர்

நற்குரு மணியும் பொன்னும் நலமதாய்ச் சொரிய மூடி
தற்பர சிவலிங் கத்தைத் தாபித்துப் பூசித் தாரே 122

என்றுமே பூசை யாதி யியல்பதாய் நடத்தும் வண்ணம்
குன்றிடாப் பொருள்கள் வைத்துங் குறைவறச் சாது வாழ
நன்றதாய்ப் பூமி காணி நயமுறச் சேர்த்து வைத்துஞ்
சென்றுதேய்ந் துருத வண்ணஞ் செவ்வையாய் நடக்கு
தன்றே 123

வேறு

செல்லப்ப தேவர் சிறப்பாம் சரிதமிதை
வல்லபமாய்க் கேட்போர் வழங்கிடுவோர் ... செல்வநலம்
பெற்றுச் சிறந்திடுவர் பேரின்ப முற்றிடுவர்
கற்றவராய் வாழ்ந்திடுவர் காண் 124

திருமலி வைகை நதிபுனை பாண்டி தெருண்மலி நாடதனில்
திகழ்மணி சோதிக் கானம தொன்று சிர்த்திய
தாயததில்
மருவளர் சோலை மலர்நிறை வாவி மரைபயில் பண்ணைகளும்
மகிதல மனிதர் அகமகிழ்ந் துலவும் மாண்பமை
சாலைகளும்
குருமணி மாடம் ஞானிய ருறையுள் கோவுறை சாலைகளும்
குலமறை யவரும் குறையறு தனருங் கும்பிடு
மாலயமும்
பெருகிய பதியது திருக்கா னப்பதி யெனவு மப்பதியில்
பேரின்ப மடைபவர் சாருவ ரெனவும் பெரியவர்
பேசுவரே 125

வேறு

அத்வைதா னந்த மோன வமிர்த நிட்கள வசங்க
சித்மயா மேய சச்சுஞ் சிம்முவு மற்ற தான
வத்மய மான யாரும் வழிபடுஞ் செல்லப் பேசர்
பத்ம்பா தத்தை நாளும் பரவியின் புருவ மாவாம் 126

வேறு

அறிவோம் நலமா யறியாத வெல்லாம்
பிறிவோம் அனைத்தும் பிறித்தே ... மறியாமல்?

சற்குருவே வாழ்கநிதம் சாந்தசிவ செல்லப்ப
சற்குருவே நின்றுள் சரண் 127

வேறு

கடதட கஜமுக கடியயபி லசுரர்கள்
தடபட முடிவிடு சண்முக சங்கரி
நடவிட விடர்பத னங்குரு செல்லய
அடைவுட னடியனுக் கருள்தரல் முறையே 128

திருமுறை மறைவர் திருமறை வாழ்க
கருமுகி லிறையவர் கடவுளர் வாழ்க
குருமுத லடியவர் குலமுனி வாழ்க
திருவறம் புகழ்ஜயம் செகமுயிர் வாழ்கவே

திருச்சிற்றம்பலம்

☆

உ சிவமயம்

# திருவெம்பாவை

## சொரூப வணக்கம்

சத்திய சித்கன சாஸ்வத சாந்த
அத்வைத மோன வகண்டறி வான
நித்திய வக்ஷர நின்மல ரூபம்
புத்தியி னித்தியம் போற்றுதல் செய்வாம்.

## கணபதி, கந்தன், சிவன், சத்தி வணக்கம்:

### வெண்பா

சற்குருமே லெம்பாவை சாற்றுதிருப் பள்ளியெழல்
விற்பனமாய்ச் சாற்றியிட வேழமுகன் – சற்குணமார்
ஆறுமுக னைந்துமுக னம்பிகையின் பொன்மலர்த்தாள்
நாறுமலர் கொண்டுதினம் நாடு.

### கட்டளைக் கலித்துறை

பொன்னூர் திருக்காரனப் பேருறை செல்லப்ப புண்ணியர்
மேல்
பொன்னூர் திருப்பாவை பூம்பள்ளி சாற்றிப் புகழ்ந்திடு
வேன்
கன்னேர் மனமுங் கரைந்துகக் கண்கள் கசிந்தொழுகத்
தன்னே ரிலாதுயர் சாதுக்கள் சித்தந் தழைத்திடவே!
முத்திக்கு நல்வித் தடியார்கள் சிந்தை முளரியில் வாழ்
சித்திக்கு வித்தம் அருள்வீசு கொண்டலென் தேசிகராம்
தித்திக்குந் தேனெனச் செல்லப்ப தேவர் திருப்புகழைப்
பத்திப் படுமென ஞனிதஞ் சிந்தித்துப் பாடுவனே!

ஸ்ரீ சற்குரு திருவெம்பாவைக் கருத்து:—

ஸ்ரீ குரு சாக்ஷாத் பரப்பிரஹ்ம ரூப நாயக
னிடத்தில் அபேத வடிவ ஆனந்த வாழ்வை

யடைய விரும்பிய பரிபாக சித்த விசிஷ்ட சீவான்ம ரூப நாயகி யானவள் தனது சாதன வடிவ தோழி களைப் பரிபக்குவ காலத்தில் துயில் எழுப்பி ஸ்ரீ சற் குரு திருவருட் புனலில் முழுகச் செய்து திருவருட் பிரபாவத்தைக் கீர்த்திக்கச் சொல்லல் என்னும் பொருளில் உருவகப் படுத்திப் பாடியிருக்கிறது.

திருச்சிற்றம்பலம்

சாதன வடிவ சக்திகளை வியந்தது அதாவது முமூக்ஷத் வாதி சாதனங்கள் ஒன்றன்பின் ஒன்றாக உதயமாகுந் தன் மையைப் புகழ்ந்து கூறியது.

1. முதலாவது சாமான்ய விவேக விசிட்ட சீவ நாயகி முமூக்ஷத்வம் என்னுங் கன்னியைத் துயில் எழுப்புதல்.

வெண்டளையால் வந்த இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா

சோதி நிராமயமாய்ச் சுத்தபரி பூரணமாய்
ஆதியிலா வத்துவாய் அண்டமெலாங் கண்டதுவாய்ப்
பாதியஸ்தி யின்பமாய்ப் பாரொடுவிண் போற்றுகின்ற
சோதி வனந்தனிலே சொல்லுகுரு செல்லப்ப
நாத னருள்பாடி நாமவன்றாள் நீர்படிந்து
மாதேநல் மார்கழியில் மாத்தான வாழ்வுபெற
ஏதமிலா முத்தியின்மே லேக்கமுறு மெல்லியலே
போதாய் துயிலொழித்துப் பொற்கொடியே யெம்பாவாய்.

2. நித்தியா நித்திய வஸ்து விவேகம் என்னுங் கன்னியை – எழுப்புதல்.

நித்தமா யத்துவித நிர்க்குணமாந் தத்துவமாய்ச்
சுத்தமாய்த் தோற்றுவது சூக்கவடி வாத்மாவே

---

1 மாத்தான வாழ்வு = மகத்தான பேரின்ப வடிவ வாழ்வு. போதாய் = வாராய்

2 தத்துவமாம் = யதார்த்தமாம். தேசிகன் சொல் = ஆசிரியரால் உபதேசித்த. (மகாவாக்கிய விசாரத்தா லுண்டாகின்ற) வேதாந்த நீர் = படர்ந்த, வேதாந்தம் என்னும் பாற்கடல். தெற்றென = சீக்கிரமாக.

மெத்தவும நித்தமாய் மேவுசட ரூபமாய்
மொத்தமாய்த் தோற்றுவது மோகசக ரூபமதே
தத்துவமா மீதெனவே சார்ந்தவி வேகமங்காய்
சித்தன் சிவரூபன் செல்லப்ப தேசிகன்சொல்
வித்தியா னந்தமிகும் வேதாந்த நீர்படியச்
சித்த முடனெழுந்து தெற்றெனவா எம்பாவாய்

### 3. இகா முத்ரார்த்த பரபோக விராகம் என்னுங் கன்னியை எழுப்புதல்.

மண்ணுலகி லுள்ளசில மாடங்கள் மாளிகைகள்
பண்ணுபணி மாலைநறு பார்தலங்க ளெல்லாம்பொய்
நண்ணுகல வைச்சாந்து நாரிமுத லாமசுத்தம்
விண்ணுலக மேனகைமுன் வேணசுக மேலமிர்தம்
புண்ணியத்தா லுற்றவவை பொய்யசட துக்கமென்றே
எண்ணுமிவை தானித்து ஏகபத மேவவெண்ணும்
கண்ணுவயி ராகமங்கை காரணசெல் லப்பேசர்
நண்ணு புகழ்பாட நாடியெழு எம்பாவாய்.

### 4. சமை என்னுங் கன்னியை—எழுப்புதல்

சமைமுதலாம் ஆறுபேர் தம்முன்னும் மாதே
அமைவுடனே முக்கால வஸ்துவையு மண்மி
சமைவுடனே புன்மாயைச் சக்கலுண்ணு நாய்போல்
சுமைமனமாம் மத்தகஜந் தூளிதலைக் கொள்ளும்
கமைஞான அங்குசத்தாற் கந்தரத்திற் குத்தித்
தமையுணருஞ் சாந்திபதஞ் சாரவரப் பெற்றுய்
நமையுணரப் போதித்த செல்லப்ப நாதர்
தமைப்பாடி யாடியிடச் சார்ந்தெழுவா் யெம்பாவாய்.

### 5 தமை என்னுங் கன்னியை--எழுப்புதல்.

தாந்தியெனும் பெண்ணணங்கே சத்தமுத லொன்றுென்றல்
வீய்ந்தரவம் யானைவிட்டில் விம்முமீன் வண்டிவைகள்
தேய்ந்த இவையுணர்ந்து சேர்செவிதோல் கண்மூக்குப்
போந்த விடயமதிற் போக்காதே நாத்தகைவாய்

---

3 ஏகபதம் = அத்வைதப் பிரஹ்ம வடிவ மோக்ஷத்தை.
கண்ணு = பெருமை மிக்க.

4. அமைவுடனே = பொருத்தமாக. சமை = பொறுமை.
சக்கல் = சக்கை. கமை = பொறுமை. ஞானம் = விவேகம்.
சாந்தி = மனவடக்கம்

ஆய்ந்தறிஞர் தேர்ந்துபுகழ் ஐயனுஞ் செல்லப்ப
ஓய்ந்த வுளத்தவரா லோர்ந்தறியுந் தேசிகர்தாள்
தோய்ந்து புகழ்பாடத் தொண்டருடன் போவதற்குத்
தேர்ந்து விழித்தெழுந்து சீக்கிரம்வா எம்பாவாய்.

## 6. உபரதி என்னுங் கன்னியை எழுப்புதல்

உபரதியென் மங்கைநீ யுற்றதெலாந் தோடம்
அவமுறவே தோற்றமிற லாக்குமெனத் தேர்ந்தே
நவநிஷித்த கன்மமென நற்காமி கர்மம்
தவநித்த நைமித்த சாற்றுபிராயச் சித்த
நவமுற்ற கன்மமெலாம் நாடுபிணி யாகும்
அவமான ஜென்மமென அத்தியந்தம் நீக்கித்
தவராஜ செல்லப்ப சற்குருதாள் பாடிப்
பவநாசம் செய்வதற்கே பார்த்தெழுவா யெம்பாவாய்

## 7. திதீக்ஷை என்னுங் கன்னியை — எழுப்புதல்

சகித்தலெனும் பெண்மயிலே சம்சாரக் காட்டில்
வெகுத்துவமாம் துன்பசுகம் வேகமுறும் பாம்பாம்
வகிர்த்துவரும் சீதசுரம் வாட்படைபோல் முள்ளாம்
மிகுத்துவரு கோபபயம் மேன்மையறு பேயாம்
பகிர்த்துவரு மின்னவெலாம் பான்மையெனக் கண்டு
திகைப்பாதி யொன்றுமின்றிச் சித்தமதில் விண்டு
சிகைத்தான ரத்தினம்போற் செல்லப்ப தேவர்
நகைத்தாளின் சீர்பாடி நாடேலோ ரெம்பாவாய்.

---

6. தோற்றம் இறல் = ஜனன மரணத்தை. ஆக்கும் = உண்டு பண்ணும். தவ = (தத்தம், வருணங்கட்கு) உரித்தான. நவமுற்ற = புதுமையும் விநோதமும் பயக்கத்தக்க. அவமான = பழிக்கத்தக்க. பார்த்து = ஆராய்ந்து அறிந்து.

7. வெகுத்துவம் = மிகுதி. வகிர்த்து = பிரிவுற்று. மிகுத்து = அதிகரித்து. பகிர்த்து = பேதமாய் அதாவது துவந்துவமாய். பான்மையென = சம்சார ஆரண்யத்தின் இயற்கைச் சுபாவம் இவையென்று. சிகைத்தான ரத்தினம் = சிரோரத்தினம்.

### 8. சிரத்தை என்னுங் கன்னியை எழுப்புதல்

முத்தாப வன்னிக்கு மூதமிர்த தாரையாய்ச்
செத்தாகும் வாரிதிக்குத் தெப்பமாம் வேதத்தை
மைத்தாய மாயைக்கு மாசண்ட மாருதமாய்க்
கைத்தாய அஞ்ஞானக் காரிருட்கு ஞானரவி
யொத்தான சற்குருவை யுண்மையாய் நம்பியுள
சித்தாஞ் சிரத்தையெனுஞ் சேயிழாய் செல்லப்பர்
மெய்த்தாங் கழல்பாடி மேவிப் புகழ்வதற்குப்
பொய்த்தாங் துயிலொழித்துப் பொக்கெனவா எம்பாவாய்.

### 9. சமாதி என்னுங் கன்னியை — எழுப்புதல்

தேசிகராற் கற்பித்த செந்நெறியாம் அர்த்தமதை
வாசியுடன் சிந்தனையில் வைத்துமற்ற வாதனையை
நேசியா தேயகற்றி நிர்க்குணமாய் நின்மலமாய்ப்
பேசியயா தொன்றுமறப் பின்னமற முன்னமற
ஆசிலதா யத்துவித மாம்சமாதி யென்னமிகப்
பேசியநற் பெண்ணங்கே பேராத சோதிவனத்
தேசிகராஞ் செல்லப்பர் சீர்பாத நீர்படிந்து
மாசிலா ஞானநிலை மன்னவெழு எம்பாவாய்.

### 10. உபசன்னத்துவம் என்னுங் கன்னியை — எழுப்புதல்.

சிவனு இந்தநானுா் சென்மமெத் தன்மையாலென்
ருேவிலாத் தேர்வினுலே யோர்மல ரத்த மேந்தித்
தேவனற் பக்தியோடு சிவர்மே லன்புமேலாம்.
பாவகப் பாசநீக்கம் பண்புடை யோகஞானம்

---

8. முத்தாபவன்னி = தாபத்திரயாக்கினி செத்து ஆகும் வாரிதிக்கு = மரண ஜனன மகா சமுத்திரத்தைத் தாண்டுவதற்கு. மைத்தாய மாயைக்கு = (மாயை ஆய மைக்கு) மாயை யாகிய மகா மேகத்தை நிவர்த்திப் பதற்கு (அத்துச்சாரியை). பொக்கென = விரைவாக.

9. பின்னமற முன்னமற = எதிர்கால விஷயத்தையும், இறந்தகால விஷயத்தையும். கருதா தொழித்து. சமாதி = குருவாக்கிய பரிபாலன யோக்கியத் தன்மையை இவ்விடத்துக் கொள்ள வேண்டும்.

10. உபசன்னத்துவம் = ஆசிரியரை, விதி பூர்வமாகச் சரணடைந்து கேட்பனவற்றைக் கேட்டல்.

ஓவறு கல்விகேள்வி யோருரு வாகவந்த
தேவனற் றேசிகேசர் செல்லப்பர் சென்றுகண்டு
ஓவிலாப் பாசநாச வுண்மைகேள் தோகையேநீ
நாவினல் வாழ்த்தநாளும் நாடேலோ ரெம்பாவாய்.

## 11. ஆத்தம் அங்கம் தானம் சற்பாவம் என்னும் நான்கு கன்னிகளை — எழுப்புதல்.

ஆசிரியர்க் கானபுரி ஆத்தமெனும் பொற்கிளியே
தேசிகர்சிற் றேவல்செய் சிரங்க மென்னுமாலாய்
கூசியிடா தன்னவரின் கூர்காணி பூமிதனம்
வாசியதாய்க் காக்கின்ற வன்தான மென்கோதாய்
மாசிலராஞ் சற்குருவே மாதேவ னென்னவறி
யேசிலாச் சற்பாவ மென்னவுயர் பொற்கொடியே
தேசுதிகழ் நால்வீருஞ் செல்லப்ப தேசிகர்தாள்
ஆசில் புகழ்பாடி யாடேலோ ரெம்பாவாய்.

## 12. சிரவணம் என்னுங் கன்னியை — எழுப்புதல்.

நரோத்தமராம் மாணவர்கள் நாடுபணி யாலே
சுரோத்திரிய ஆன்மநிஷ்டர் சோதனைசெய் யாதே
சுரோத்திரசம் பந்தியென்று சொன்மகா வாக்கைத்
தரோத்தர சங்கையொடு கேட்டலெனச் சாற்று
வரோத்தம மானகன்னி வானேரும் வாழ்த்து
சிரோத்தரம் செப்புகின்ற செல்லப்ப தேவர்
பரோத்தம தாட்கமலப் பண்பதனைப் பாடிக்
கரோத்தம பூச்சூடிக் காண்குவம்வா எம்பாவாய்.

## 13. மனனம் என்னுங் கன்னியை - எழுப்புதல்

வேதானு சாரதர்க்கம் வேதமகிழ் வானயுக்தி
நூதனம தாகச்செய் நோக்குமன னச்செல்வி
சோதி வனந்தனிலே சோதியாய் வீற்றிருக்கும்
போதகன் வேதன்மால் புங்கவர்கள் போற்றுகின்ற

---

12. நரவுத்தமராம் = உத்தம மானுடராகிய. சுரோத்திரிய ஆன்மநிஷ்டர் = சுரோத்திரியம் பிரஹ்மநிஷ்டர். தர வுத்தர. சங்கை = மேலான சங்கை சமாதானம், வரவுத்தமமான = மிகவும் சிறப்பு வாய்ந்த. சிரவுத்தரம் = தலை சிறந்த சமாதானம். பரவுத்தம = சர்வோத்கிருஷ்ட மான கரவுத்தம பூ = கரத்தால் சாதி மலரை எடுத்து.

நாதனுஞ் செல்லப்ப நாயகனுஞ் சற்குருவை
நீதமாய்ப் போற்றுதே நீள்பேர் துறங்குதியோ
மாதே எழுந்திருந்து மாண்பான நீர்தனிலே.
ஆதார மேபாடி யாடலோ ரெம்பாவாய்.

### 14. நிதித்தி யாசனம் என்னுங் கன்னியை — எழுப்புதல்.

தெளிதலெனும் பெண்ணணங்கே ஜேஷ்டமந்த்ர யோகம்
வளியோடு செய்கின்ற வான்பரிச யோகம்
நளினமாய்ச் செய்கின்ற நற்பாவ யோகம்
எளிதினிலே செய்யவொண்ணு ஏற்றமிக பாவம்
வெளியான வத்துவினில் வீழ்மனமா யோகம்
களியான விந்தயோகாற் கண்டுகொண்டா யெந்தத்
தெளிவான செல்லப்ப தேசிகராந் தேவை
அளியோடு நாம்பாடி யாடுவம்வா எம்பாவாய்.

### 15. நிட்டை என்னுங் கன்னியை—எழுப்புதல்.

சாற்றுசவி கற்பமுடன் சார்ந்த நிருவிகற்பம்
ஏற்றமிகு அப்பியாச வேற்புடைய வந்நிலேயில்
தோற்றுசக பேதமெலா மின்பமிலே துன்பமென்றே
மாற்றியபே தந்தேறி மாறிலாத் தத்துவத்தில்
வீற்றிருக்குஞ் சித்தமுடை வீரமுள்ள மங்கைநீ
ஏற்றமிகு வட்டவடி வெங்குநிறை பொங்குமகிழ்
தேற்றமிகு செல்லப்ப தேசிகர்தாள் சீர்பாடித்
தோற்றரிய வின்பநீர் தோய்ந்திடவா எம்பாவாய்.

### 16. விசாரம் என்னுங் கன்னியை—எழுப்புதல்.

பூசகனுஞ் சிவன் புகன்றிடு தொம்பதார்த்தம்
மோசகனு மீசன் மொழிந்திடு தத்பதார்த்தம்

---

14. ஜேஷ்ட = தலைமையான. வளியோடு = பிராண வாய்வுடன். நளினமாய் = விநோதமாய் (இலகுவாய்). களியான = மகிழ்ச்சியைத் தரத்தக்க(பெருமைமிக்க)

15. தேறி=பிரமாண தர்க்கங்களால் துணிந்து (நிச்சயித்து). மாறிலா=சுருதி, யுக்தி, சுவானுபவங்கட்குச் சிறிதும் மாறுபடாத.

16. காட்சி தன்னை = தோற்றத்தை (கண்காட்சியை) காண்குவம்வா = மனதாரத் தரிசிப்போம்; அன்புடன் வருவாய்.

வாசகமித் தால்வந்த வாச்சியவ சித்தைநீக்கித்
தேசுறுசித் தைத்தானாய்த் தேறிடு கின்றதான
ஆசறுவி சாரநங்கா யாரணம னந்தமாகப்
பேசுறு கின்றஞானப் பேரருட்செல் லப்பேசர்
ஏசறுஞா னந்தன்னை யேற்றவர்க்குக் கூறுகின்ற
காசறு காட்சிதன்னைக் காண்டுவம்வா எம்பாவாய்.

## 17. ஞானம் என்னுங் கன்னியை—எழுப்புதல்.

குருவே பிரமாவாம் கோவிந்த னாகும்
குருவே யுரையிறந்த கோமானா மென்றே
குருவாக் கமிர்தமெனக் கொண்டுறையு மாணன்
உருவா யிருந்தொளிரும் உத்தமஞா னம்பா
திருவாருங் கானப்பேர் செய்தவப் பேறே
சொருபா யெழுந்து சுருதியி னர்த்தம்
தருஞான செல்லப்ப சற்குருதாள் போற்றி
அருவான வின்பநீ ராடேலோ ரெம்பாவாய்

## 18. மைத்திரி கருணை முதிதை உபேக்ஷை என்னுங் கன்னிகளை—எழுப்புதல்.

ஆர்வமுறுஞ் சற்புருடர்க் கன்புசெயும் மைத்திரியே
சோர்வுபெறுந் துக்கிகள்பாற் சொல்லிரக்க மாங்கருணாய்
தேர்வுறுநற் புண்ணியர்பாற் செய்விருப்ப மாமுதிதாய்
கார்மேவு பாவிகளைக் காயுபேக்ஷை யென்றகன்னி
சீர்மேவு மூவருரை தென்கானப் பேருறையும்
பேர்மேவு செல்லப்பப் பெம்மான் கழல்சூடிக்
கார்பொழியும் நீராடிக் கண்பொழிய நீர்பாடத்
தார்குழலீர் நால்வீருஞ் சார்ந்தெழுவீ ரெம்பாவாய்.

## 19. வான் சிறப்பின் தன்மையைக் கூறுதல்.

சீர்மேவு மெஞ்ஞான சேகரமாய் வீற்றிருக்கும்
பேர்மேவு செல்லப்பப் பேர்குரவன் றுள்சூடும்

---

17. மாணன் உருவாய் = (பிரஞ்ஞானம், பிரஹ்மம் என்னுஞ் சுருதியால்) சீடனது சுத்த சொருபமாய். சொருபமாய் = (திவ்ய மங்கள) வடிவமாய். அருவான இன்பநீர் = அருவமான பேரின்ப சகாரத்தில்.

18. கார்மேவு = கருத்த இருளை நிகர்த்த பாவம் பொருந்திய. பாவிகளை. காய் = விலக்குதல் அல்லது நீங்குதல். மூவர் = சம்பந்தர், அப்பர், சுந்தரர் என்ற மூவர்களால். உரை = புகழ்ந்து பாடப் பெற்ற.

நேர்மேவு சீடரணி நீற்றினிறம் போற்கிளம்பி
ஆர்மேவு நீர்குடித்து அன்னவர்தள் ளஞ்ஞானம்
நேர்திரும்பி யாங்கவர்செய் நீர்மையுள கீர்த்தனமே
நேரிடித்து அத்தவர்சூழ் நீர்மையென வில்லேந்தி
ஏர்மேவு மக்கமணி போன்மின்னி யின்னருள்போற்
கார்மேவு வான்பொழிந்து காத்திடுக எம்பாவாய்.

## 20. ஸ்ரீ குருவின் சீர்பாத வல்லபத்தைக் கூறி உப சம்மரித்தல்.

போற்றியென் செல்லப்ப தேசிகர்தன் பூங்கழல்கள்
போற்றியென் சென்னிதனிற் சூடும் பொலன்றாள்கள்
போற்றியென் சித்தம் புனைந்திடும் பொற்பதங்கள்
போற்றியென் னஞ்ஞானம் போக்குந் திருச்சரண்கள்
போற்றியென் சித்தமலம் போக்கும் இணையடிகள்
போற்றியே மெய்யடியார் போற்றுந் திருவடிகள்
போற்றிதிருக் கானப்பேர் புண்ணியராஞ் சாதுவுடன்
போற்றிநாம் மார்கழிநீர் ஆடேலோ ரெம்பாவாய்.

வாழ்க வேத முடிப்பொருள் வானவர்
வாழ்க சற்குரு மாபதஞ் சாதுக்கள்
வாழ்க மன்னவர் மன்பதை வையகம்
வாழ்க ஆனினம் மாமழை வாழ்கவே

திருச்சிற்றம்பலம்.

## ஸ்ரீ சற்குரு திருப்பள்ளி எழுச்சி

ஸ்ரீ பரப் பிரஹ்ம சொரூபா காரமாக ஸ்திதி பெற்ற சாத்வீக விருத்தி விசிஷ்ட ஸ்ரீ சற்குரு பகவான் சீடர்களது பரிபாகங் கருதி சுருதி யுக்தி அனுபவங்களால் உபதேசிக்கவேண்டி அவர்களது கர்மானு சாரம் பகிர்முக திருஷ்டி யடையும் அவசரமே இங்கு திருப்பள்ளி எழுச்சி எனப் படுகிறது

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சீர்பெருங் கானப்பேர் நகர்தனில் வாழுந்
தேவர்கள் தேவனே திருவுருத் தாங்கிப்
பேர்தரு மான்மழு விதழியு மதியும்
பிஞ்ஞகச் சடையதும் பெண்ணொரு கூறும்

ஆர்தரு இடபமு மனல்விழி யதுவும்
அகற்றியே யருமறை முடிவதை யோதும்
ஏர்தரு தேசிக ஞகவந் தருளும்
என்னிறை யேபள்ளி யெழுந்தரு ளாயே. 1

ஆதித்த னுதித்தனன் அருளொளி தாக்கி
ஆதிமத் யாந்தமும் அகன்றிட நீக்கிச்
சோதித்த ரூபத்தை யகமதிற் றாக்கித்
துரிய நிலந்தனில் மனமதை யாக்கிப்
பேதித்த வாதியர் பிணக்கதைப் போக்கிப்
பேரின்ப சாகரந் தனிலெனை வீக்கிச்
சாதித்த காளிநற் புரிதனில் வாழுஞ்.
சற்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே. 2

பவக்கடல் கடப்பவர் உவப்புறு வடிவாய்ப்
பார்புகழ் காழியிற் சீர்பெற வுதித்துச்
சிவக்கொழுந் தெனவளர் சம்பந்தர் பாடல்
சீர்நிறை சுந்தரர் சிறப்புறு பாடல்
தவக்கட லெனவளர் கானப்பே ரூரிற்
தவசிக ளுறைவிடஞ் சால்புற வமைத்து
அவக்கடல் கடந்திட அடியனை யாண்ட
அருட்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே 3

பச்சைமா மேனியன் பசுமரை மேலோன்
பார்விசும் போடியுந் தேடியுங் காணு
நச்சராப் புனைதிரு நாயகன் வாழும்
நறைமலர்க் காவமர் கானப்பே ரூரில்
விச்சையே வேண்டினர்க் கருள்தரு புனிதா
விமலனே சற்குரு செல்லப்ப நாதா
இச்சகந் தனிலுழல் எளியனை யாண்ட
என்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே 4

ஆனைகள் வழிபடுங் கானப்பே ரூரில்
ஆழிய வாவிகள் நந்தன வனங்கள்
வானமர் மறைபயி லிடங்கள்பற் பலவாம்
மடங்களு மன்னக ரிடம்பல வுளவாம்

---

2. தூக்கி = உயர்த்தி (ஆராயச்செய்து) வீக்கி = செலுத்தி.
4. விச்சை = வித்தை (ஞானம்)

தானிகர் மறைமுடி வாச்சிர மதில்வாழ்
  தவசிகள் மனமுறை தருசிகா மணியே
தேனமர் மறைமொழி தினமுவந் தளித்த
  செல்லப்ப குருபள்ளி எழுந்தரு ளாளே 5

பொருளெனத் திருவடிப் புகலிடங் காட்டிப்
  போதமார் வேதமும் பொருந்திட நாட்டி
இருளூறு மனமய லிரிந்திட வோட்டி
  இருவினை பாசங்கள் எரிந்திட வாட்டி
மருளூறு கன்மங்கள் மாயையை வீட்டி
  மாதவம் போதனர் மனமதில் மூட்டித்
தெருளூறும் வேதனந் திருவுள மூட்டுஞ்
  செல்லப்ப குருபள்ளி எழுந்தரு ளாயே 6

தாய்வயிற் றுறுதுயர் ஐந்தையும் நினைந்தோ
  சார்ந்திடும் பாலியத் துறுதுயர் நினைந்தோ
ஏய்தரு மெவ்வனத் துறுதுயர் நினைந்தோ
  இடர்மிடி பசிபிணி நரைதிரை நினைந்தோ
காய்தரு காலனு லுறுதுயர் நினைந்தோ
  கானப்பேர் நகரிலுன் கழலிணை யடைந்தார்
ஏய்தர வின்பமே யெளிதினி லருளும்
  என்குரு வேபள்ளி யெழுந்தருளாயே 7

பத்திய மொழிகளாற் பாடின ரொருசார்
  பாமலர் மாலைகள் சூடினர் ஒருசார்
சித்திகள் பலசெயுஞ் சித்தர்கள் ஒருசார்
  ஜெபதப மலர்புனை செல்வர்க ளொருசார்
மெத்திய சிரவண மனனமுந் தெளிவும்
  மேலுமே லியற்றிடு மேதைய ரொருசார்
இத்தகை யெவர்களுங் காத்தினி திருந்தார்
  என்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே 8

சிந்தனை வாதனைச் செயலதைத் தீர்த்துத்
  தேயத்தின் ஞேயத்தின் வாசனை மாய்த்துப்

---

5. மறைமுடிவாச்சிரமம் = வேதாந்தமடம்.
6. புகலிடம் = சரணடையுமிடம்.
7. அடைந்தார் = அடைந்த அதிகாரிகளை வரும்.
8. பத்திய மொழிகள் = தமிழ்ப் பாடல்கள். பாமலர் = ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, என்னும் மலர்களால்

பந்தனை வேதனைப் பவமறப் பார்த்துப்
பார்தனி லாரிவர் நேரென வார்த்துச்
சிந்தனை தனிலமு தூறிட வார்த்துத்
தீயவர் கூட்டுற வனைத்தையும் பேர்த்து
எந்தனை யாண்டிடக் கானப்பேர் வந்த
என்குரு வேபள்ளி யெழுந்தரு ளாயே 9

சந்தத முன்றனித் தாள் மலர் போற்றித்
தனித்தனிப் பாவினஞ் சரசமாய்ச் சாற்றிச்
சிந்தையி லுன்றனித் திருவுரு வேற்றித்
தீயவா சனைகளைத் தீர்ந்திட மாற்றித்
தொந்தனைத் துயரதைத் தூரத்தில் தூற்றித்
தூயவர் தொண்டுகள் தோன்றிட வாற்றி
எந்தனை யுய்ந்திடச் செய்தகண் மணியே
என்குரு வேபள்ளி எழுந்தரு ளாயே 10

---

9. தேயத்தின் வாசனை = தேய வாசனை. அதாவது வாசிட்டம் புண்ணிய பாவனர் கதை 16வது பாட்டு.

பொருளினே மல்ல நாமும் நமதல்லப் பொருளு மென்றே.
தெருளுற்றுட் குளிர்ந்து யாவும் விநோதமாய்ச் செய்யு நெஞ்சால்
மருளறு நிச்சயத்தால் வாசனை விடுதல் தானே.
அருள்பொழி மேக மொப்பாய்தேய மென் றறிவாய் அன்றே.

ஞேயத்தின் வாசனை = ஞேய வாசனை. அதாவது வாசிட்டம புண்ணிய பாவனர் கதை 17 வது பாட்டு.

தனதுவா தனைமாண் டெல்லாஞ் சமமதா நெஞ்சாற் பண்ணி
யெனதெனு துடலை நீக்கி னிந்த வாசனை நாசந் தான்.
அனகமா ஞேய மாகும் அகங்கர மயம தான,
வினவுவா தனையை முற்றும் விநோதமாய் விட்டோர் மேலோர்.

★

உ

சிவமயம்

# ஸ்ரீ சற்குரு இரட்டை மணி மாலை

(ஸ்ரீ சற்குருவின் சீர்பாத வல்லபத்தால் முத்திபெற்ற சீடர் வரிசையைக் கூறுதல்)

## காப்பு

கரிமுக னறுமுகன் கௌரிசங் கரன்குரு
புரிதிரு வருள்பெறு புண்ணிய மதுகொடு
குருதிரு இருமணி வடமதை யடிகொள
வொருசிறு சிவசுக முரைதரு வேனே

## வெண்பா

தேவே திருமறைசொல் செல்லப்ப தேசிகனே
மாவேழ் செனனத்தை மாற்றுகென நாவினுற்
பாமாலை சூடியே பாடுற்றுன் மொட்டரண்வாழ்
சீமானு மாத்மசுகன் தேர் 1

## கலித்துறை

தேராய் திருப்பணி செய்த சிதம்பரச் சீர்தவனும்
நேராய்ப் பணிபல செய்முத்து ராம நிருமலனும்
பாரோர் புகழ்செல்லப் பேசர் பதம்பல காற்பணிந்து
நேரேது மின்றிய நின்மல வீடுறும் நித்தியரே 2

## வெண்பா

நித்திய போகத்தை நீக்கமறத் தான்புசித்துச்
சத்தியநற் செல்லப்பர் தாளுற்றூர்—நித்திய
ஆனந்த மாதவனு மன்னவனு லாதரித்த
தானந்து சங்கரனுந் தான் 3

---

காப்பு:— இரு மணிவடம் = இரட்டை மணி மாலை

1. மொட்டரண் = அருப்புக்கோட்டை (ஆத்மானந்த சுவாமிகள்)
2. அருப்புக்கோட்டை சிதம்பர சுவாமிகள் முத்துராம சுவாமிகள்
3 நித்தியானந்த சுவாமிகள், சங்கரானந்த சுவாமிகள்

## கலித்துறை

தானுக வந்த சிதம்பர சாமியென் சற்குண னும்
மானுகங் கொன்றை மதியணி யீசன் மலரடியிற்
பூநாறு மாலையும் பூஜையும் செய்து புகழடைந்து
ஞானு கரகுரு செல்லப்பர் தாண்மலர் நண்ணினனே 4

## வெண்பா

நண்ணினுர் சற்குருவாம் செல்லப்பர் நாண்மலர்த்தாள்
புண்ணியராம் சாந்த சதாசிவனுர்—எண்ணியே
வேதாந்த நூலை விதரணையாய்த் தான்கற்றுப்
போதாந்தம் புக்கபுனி தர் 5

## கலித்துறை

புனிதனே சற்குரு செல்லப்ப தேவாவுன் பூங்கழலே
பனிசெயும் மாயையைப் பாறிடச் செய்யுமுன் பார்வையதே
இனியன யாவு மியற்றிடு மென்று இயலுணர்வாற்
றனியுயர் முத்தியுற் ருன்பெரு மாளெனுஞ் சார்தவனே 6

## வெண்பா

சார்தவனே செல்லப்ப சற்குருவே யென்றடைந்து
பேர்ஞான வின்பப் பெருமையொடு—நேர்சீவ
முத்தியுஞ் சித்தியும் மோனமும் பெற்றுயர்ந்தான்
சித்தபொன் னம்பலமாந் தே 7

## கலித்துறை

தேவமா தேவனே சற்குரு செல்லப்ப தேசிகனே
மூவரும் முத்தர் முனிவரும் போற்றும் முடிவெதுவோ
பாவலர் போற்றும் பரிசெது வெற்குப் பரந்தளியென்
ருவல தாக வடைந்தனன் முத்தைய வான்றவனே 8

---

4. அலவாக்கோட்டை சிதம்பர சுவாமிகள்
5. சதாசிவ சுவாமிகள். போத அந்தம் = முடிவான ஞானம்
6. பெருமாள் சுவாமிகள்.
7. பொன்னம்பல சுவாமிகள்
8. முத்தையா சுவாமிகள்

### வெண்பா

ஆன்றவனே செல்லப்ப ஆரியனே சத்தியமாய்ப்
பூன்றவடி வெற்களிப்பாய் புண்ணியனே - தோன்றல்
இறத்தலிலா முத்தியுற வென்றான்சுப் பைய
மறத்தலிலா மாதவனு மன் 9

### கலித்துறை

மன்றுடு மாமணி சற்குரு செல்லப்ப மாதவனே
வொன்றோ விரண்டோ வொருமூன்றோ வென்ற வுலகமயல்
இன்றோ டொழிய வெளியனை யாள விரங்குகென்றான்
குன்று வருணிறை நாரா யணனெனுங் கொற்றவனே 10

### வெண்பா

கொற்றவனே ஞானக் குரிசிலே செல்லப்பா
கற்றறியா வென்னையுநீ காத்திடுவாய்—நற்றவமே
ஆக்குவாய் ஞான மளிப்பா யெனவடைந்தான்
நீக்கமிலா நாகலிங்க னித்து 11

### கலித்துறை·

நீதன் மறைமொழி நேர்மை பலசொலும் நித்தியனும்
போதன் குருஞான செல்லப்ப னென்னும் புகழ்மணியே
வேதா அரிசிவன் கூறிய ஞானத்தை வேண்டிவந்தேன்
தாதா வெனவடி வேட்டனன் நாரணத் தன்னியனே 12

### வெண்பா

தன்னியனும் புண்ணியனே சற்குருவே செல்லப்பா
மன்னிய ஞானமெனும் வாரிதியே—சென்னியிலே
நின்றாள் புனைந்தனன்யான் நீக்கமிலாப் பாக்கியந்தா
வென்றான் சுயம்பிரகா சன் 13

---

9. முதுகுளத்தூர் சுப்பைய சுவாமிகள். கலையூர் சுப்பைய சுவாமிகள்.

10. சாக்கை நாராயண சுவாமிகள்

11. பெருங்கருணை நாகலிங்க சுவாமிகள்

12. நாராயண சுவாமிகள்

13. திருச்சிராப்பள்ளி சுவாமிகள்

## கலித்துறை

சுயம்பிர காசச் சுடரொளி செல்லப்பத் தோன்றலேயென்
பயம்பெறு பத்தியுன் ருளிற் பதித்தனன் பானமருள்
செயம்பெற வென்றனன் சிர்முத்து வேலெனும் சிர்தவனும்
வயம்பெறு கூடல் மடந்தனில் நாளும் வதிந்தவனே 14

## வெண்பா

வதிந்தான் மதுரைக் கிருஷ்ணனும் மாண்போன்
பதிந்தாறு கண்ணீர் பரவிப் — பதந்தருவாய்
செல்லப்ப தேசிகனே தேவாதி தேவவென்று 15
சொல்லிப்பல் ஞானவளந் துய்த்து

## கலித்துறை

துய்த்தனன் பல்வகை யூழின் வலியின் தொடர்புகளைக்
கைத்தனன் காம வெகுளிமுன் ஞன கருத்ததிலே
மெய்த்தவ செல்லப்ப தேசிகன் பாதம் விரைந்தடைந்தான் 16
உய்த்தமெய் யன்புடை வேலா யுதனெனு முத்தமனே

## வெண்பா

உத்தமனுங் கந்தையா வோதுபழ னிச்சாமி
சத்தியசெல் லப்பகுரு தாள்பணிந்தார் — பத்தியுடன்
நிச்சலமாய் நின்றமுரு கானந்தர் நித்தபத 17
வச்சலராய் வீட்டில் வசித்து

## கலித்துறை

வசித்தே பணிபல மன்னிப் புரிந்திடு மாரிமுத்து
நசித்தே பிணிபல ஞானசெல் லப்பரை நாடிவந்து
சுசித்தான சாஸ்த்திரந் தொல்வேத வாக்கியஞ் சொன்னநெறி
புசித்தான்ம ஞானமு மோனமு முற்றுப் பொலிந்தனனே 18

---

14. முத்துவேல்ச் சுவாமிகள் 15. மலையாழம் கிருஷ்ண
சுவாமிகள் 16 வேலாயுத சுவாமிகள் 17. கந்தையா
சுவாமிகள். பழனிச்சாமிகள். முருகானந்த சுவாமிகள்.
18. மாரிமுத்துச் சுவாமிகள் 19. அச்சுதானந்த சுவாமிகள்
20. அருணசல சுவாமிகள். சிமான் = செல்வ
முள்ளவன். பூமான் = அரசன் (சமீன்தார்)

## வெண்பா

பொலிந்திடு ஞானமும் பூரண அன்பும்
மலிந்திடுஞ் செல்லப்ப மாண்போய் — மெலிந்தனன்யான்
அஞ்ஞானத் துன்பகற்றி யாதரிப்பா யென்றடைந்தான்
சுஞ்ஞான வச்சுதநீத் தோன் 19

## கலித்துறை

தோன்ற லருண சலமெனுஞ் சிமான் தொழும்பரொடு
வான்றவர் வாழ்தேவ கோட்டையிற் பூமானய் வாழ்ந்தவனும்
ஆன்றவர் போற்றிடு மாரிய செல்லப்ப ஆண்டவர்தாள்
சான்றெனக் கொண்டு தனித்தெய்வ மாயங்கு சார்ந்தனனே

## ஸ்ரீ குரு துதி

என்னை யாண்டவன் கானப்பேர் வாழ்ந்திடு மிறைவன்
முன்னை ஞானத்தை மொழிந்திடும் முனிவர்க்கும் முதல்வன்
அன்னை யத்தன யல்பகல் காக்குமென் னய்யன்
தன்னைத் தானருள் சற்குரு செல்லப்பன் ருனே

செல்லப்ப தேசிகரின் சீடர்தமை யெண்ணுமவர்
அல்லற் பவமகற்று வார்



உ

சிவமயம்

# ஸ்ரீ சற்குரு நான்மணி மாலை

## மங்கலம்

ஆனை மாமுகன் ஐமுகன் சண்முகன்
பான லங்கணி பார்வதி சற்குரு
தானி தமிவர் தாண்மலர் போற்றுவேன்
ஞான சற்குரு நான்மணி பாடவே

## வெண்பா

அருவே யுருவா யருண்மேனி சாத்திக்
குருவா யெழுந்துவந்த கோவே—தெருளையறி
கில்லாச் சிறியேனைக் கேடிலடி சேர்ப்பதுவே
செல்லப்ப தேவாவுன் சீர் 1

## கலித்துறை

சீரார் திருப்பெருங் கானப்பேர்ச் செல்லப்ப தேசிகனே
பேரார் நினது புகழ்நாளும் பேசப் பிரியமுற்றேன்
நேரேது மில்லாச் சிறியவன் நெஞ்ச மினிதிருந்து
தாராள மாகநான் பாடிட வேண்டுந் தயவுசெய்யே 2

## விருத்தம்

செய்தவ ருறையுங் கானப் பேர்தனிற் சிறந்த மேலோர்
செய்தவப் பலனாய் ஞானம் தினமுவந் தளிக்க வல்லாய்
செய்தவ நாளைப் போக்குஞ் சிறியனை யாள நீயுஞ்
செய்தவக் கிருபை யென்ன செல்லப்ப தேவ தேவே 3

## ஆசிரியப்பா

தேவனே சற்குரு செல்லப்ப நாதனே
பாவமுந் தாபமும் பஞ்சமா பாதகம்

யாவையு மாக்கு மவாவு மகற்றிலேன்
பாவையர் காதலைப் பற்றற விட்டிலேன்
ஞானமே யுற்றிட நாடியே வந்தனன்
ஏனிவ ணுற்றனை யென்றுநீ கேட்டிலை
நானுமே வந்ததை நன்று யுரைத்திலேன்
மோனமே யுற்றுநான் முக்கணன் கைலையைப்
பார்த்துமே வந்தாற் பாவன மாயிடும்
தீர்த்தமு மாடித் தேகமும் நொந்தால்
வார்த்தையுஞ் சொல்வர் மாசறு குரவர்
ஓர்த்திது செய்வதே யுறுதிய தாமென
எண்ணிநா னேங்கி யிளைத்துறு நாளையில்
கண்ணிய மாகக் கவின்மடக் காரியம்
எண்ணியே பார்க்கும் எழிலுறு சிதம்பரப்
புண்ணிய சாது பொருக்கென வுற்றுச்
சிறிதுநா ளிங்குக் சிலகல்வி கற்று
அறிவை யடைவது அப்புறம் பாரே
வெறிதுநீ போயிரு வென்று
நறியன கூறியு நண்ணின ரன்றே. 4

## வெண்பா

நண்ணினர் சாக்கைக்கு நாரா யணசாமிப்
புண்ணியர்க்குக் கைவல்யப் போதகநூல்—திண்ணிதாய்ச்
சாற்றித் திரும்புதற்குச் சற்குருசெல் லப்பேர்
போற்றியவர் பொற்பூங் கழல் 5

## கலித்துறை

கழல்சூடு மெய்யடி யார்பலர் கண்டு களிப்புடனே
தொழவேறு தன்னி லுமையோடு தோன்றுவீ ரேசுரனைப்
பழவடி யாருடன் போற்றிப் பரவிப் பணிபுரிந்து
அழகா யிருந்தனர் செல்லப்ப சற்குரு ஆண்டவரே 6

## விருத்தம்

ஆண்டுநீ கொண்டி டாக்கா லடியனை யஞ்சே லென்று
மாண்டகு வுலகிற் கூற வல்லவ ருண்டு கொல்லோ

---

4 ஓர்த்து = ஓர்ந்து (ஆராய்ந்து). பொருக்கென = விரைவாக

தூண்டகு சுடரே ஞானத் தோன்றலே செல்லப் பேசா
பூண்டுளே னினது தொண்டைப் பூங்கழல்
பணிந்திட் டேனே 7

## ஆசிரியப்பா

பணிந்துநான் கானப் பழம்பதி யுற்றுத்
துணிந்து பணிபல தூக்கியே செய்தேன்
ஆற்றுறு நாளில் அரும்பசுக் கன்றுகள்
போற்றியே வந்திடப் பொன்மொழி தந்தார்
அதனையுஞ் செய்து அடிபணிந் துற்றேன்
நிதமலர் கொய்யென நேமித்தார் மேலும்
கதம்பமே யாதி கடிமலர் வில்வம்
பதம்பெற வேண்டிப் பரிவுடன் கொய்து
இதம்பெற நாளு மிருந்து வருங்கால்
தேக்கமழ் வாவி செழும்பொழில் சூழும்
சாக்கையி னின்றுஞ் சற்சன ரோடும்
அரிபிர மாதியர் அண்டிடுங் காளிப்
புரியதில் வாழும் பொன்மடத் துற்றுயர்
சற்குரு செல்லப்ப தயாபரர்
விற்பன போதராய் வீற்றிருந் தாரே 8

## வெண்பா

வீற்றிருந்த சற்குருவை விற்பனமாய் நான்றொழுது
வேற்றறியாச் செல்லப்ப வித்தகரே—மாற்றரிய
அஞ்ஞானத் துன்பா லழிந்தநா ளெண்ணரிது
விஞ்ஞானந் தந்துவ வேண்டு. 9

## கலித்துறை

வேண்டுஞ் சிரவணஞ் சிந்தனை நிட்டை விளம் பெனக்குத்
தூண்டுஞ் சுடரொளி செல்லப்ப சோதி துரியமுற்று
மாண்டு பிறப்பறி யாவழி மன்னிநான் வாழவெண்ணு
காண்டற் கினியவ காட்சிக் கெளியவென் கண்மணியே 10

## விருத்தம்

கண்மணி யனைய தேவா காரண செல்லப் பேசா
வுண்மணி யனைய சோதி யொருவனை வெளியாய்க்காட்டி

---

8 தூக்கி = ஆராய்ந்து. காளிப்புரி = காளையார்கோவில்.
10. துரியம் = நனவிற் சுழுத்தி வடிவ ஞான நிலை

மண் மீனை பொன்னில் வைத்த மயலெலா மிரிய
வோட்டித்
தண்மன மெனக்குத் தந்து தன்னிய னுக்கு வாயே 11

## ஆசிரியப்பா

ஆக்குவாய் ஞானம் அடைக்கலம் புகுந்தேன்
ஆக்கையோ டாவி பொருளு மளித்தனன்
மீக்குயர் தத்துவர் மேவிப் பணிபுரி
தாக்கறு செல்லப்ப சற்குரு மணியே
என்றுநான் கூறி யிணையடி தொழுதேன்
கன்றினுக் கிரங்குங் கருணைநற் றாய்போல்
நன்றுநன் றென்ன நகைமுகங் காட்டி
திறம்பட வெல்லாந் தெரிந்தே இருந்தும்
பரம்பரைக் கிரமம் பாலிக்க வேண்டி
அடுத்துமே நின்ற அடிகளை நோக்கிப்
படிப்பிவற் குண்டோ பகருமின் நீரென
நன்னூ லிலக்கியம் நாலடி குறள் முதற்
சின்னூற் சிலதெரிந் தாய்ந்துசிந் தித்தவர்
பாடம் படிப்பதிற் பண்பினர்
தேடரும் தேசிகா வென்றனர் சிறந்தே. 12

## வெண்பா

சிறந்தான் றமைந்து திகழ்ந்திடு மேலோர்
பிறந்ததி னற்பேறும் பெற்றோர் — மறந்தவிர்த்த
செல்லப்ப சற்குருவைச் சிந்தைதனில் வந்திப்பார்
வல்லப்பல் மாயைவலி மாய்த்து. 13

## கலித்துறை

மாய்த்துப் பொறிபுலன் மன்றுடி மாயை வலிதொலைத்துத்
தேய்த்து மனமதைச் சிந்தனை வாதனை தீரவிட்டுக்

---

11. தண்மனம் = உபசாந்த வடிவ சித்தவிருத்தி.
தன்னியன் = கிருதார்த்தன்.
12. தத்துவர் = உண்மைஞானிகள். தாக்கறு = அசங்கரூப.
13. சிறந்து ஆன்று அமைந்த = சிறப்பும், மாண்பும் பொருந்திய. வல்லப் பல் = வன்மையும் பன்மையும் உடைய மாயை வலி = மாயையின் சாமர்த்தியத்தை,

காய்த்துப்பவமதைச் சிவநன்முத்திக் கனிநுகர்வார்
வாய்த்துக் குருபர செல்லப்ப தேவரை வாழ்த்துவரே 14

## விருத்தம்

வாழ்த்திட நாக்குத் தந்தாய் வணங்கிடச் சிரமுந் தந்தாய்
தாழ்த்திடப் பாச மாயை தடமதி யெனக்குத் தந்தாய்
ஊழ்த்திடக் காம கோப முணர்வையுந் தந்தாய் நீயே
வீழ்த்திடா தெனையாட் கொண்ட வியன்குரு செல்லப்ப பேசா 15

## ஆசிரியப்பா

செல்லப்ப வீசர் திருவருள் கூர்ந்தார்
கல்லைக் கனியென வாக்கலிற் கடிதாம்
ஒல்லையி லென்மன மோர்மை யடைய
வல்லிதிற் செய்து வலிய வழைத்துநீ
கட்டளை யாதியாய்க் கைவல்ய மீறதாய்
நெட்டுருப் பண்ணென நேமித்தா ரன்றே
அடிபணிந் தவ்வா றடிமையும் புரிகுவான்
கடிமலர்க் கரத்தாற் கனரத்தி னுவளிப்
புத்தகம் பெற்றுப் புதியதாய்
நித்தமுங் கற்றிட நேர்ந்தன னன்றே 16

## வெண்பா

அன்றே யடியேனை யாண்ட குருபரனே
நன்றே யுனைத்தினமும் நாடினேன்—குன்றே
அருட்கடலே செல்லப்ப ஆரியனே வுன்றன்
இருப்பிடமென் நெஞ்சமதா யேல் 17

## கலித்துறை

ஏலா தவனொரு வேழைநா னென்னையீ டேற்றுவதும்
நாலா மறைபுகழ் செல்லப்ப நாதவுன் நாட்டமதே
சேலார் வயற்றிருக் கானப்பேர் வந்த செழுஞ்சுடரே
பாலாம் பதநிறை ஞானமன் வாக்கினைப் பன்னுவையே 18

## விருத்தம்

பன்னரு மறைகள் கோத்த பழமுனி பணித்த வெல்லாம்
என்னறி வளவிற் கேற்ப வெடுத்துநீ யுரைக்க வேண்டுங்

கன்னலுஞ் செந்நெல் சூழ்ந்து கவின்செயுங் கானப் பேரில்
நன்னய மாக வாழ்ந்த செல்லப்ப நாதா போற்றி. 19

## ஆசிரியப்பா

போற்றியே சற்குரு போதசெல் லப்ப
சாற்றிய தேவரீர் தயவுரை பெற்றுக்
கட்டளை முன்னுக் கருதிய நூலை
நெட்டுருப் பண்ணி நிறைத்தன னடியேன்
கரும்பினு மினிய கருத்துரை யதனுல்
அரும்பொருள் கூறி யடியனை யாளத்
திருவருள் சுரக்க வேண்டும்
குருபரா வென்றுகை குவித்துரைத் தனனே 20

## வெண்பா

உரைத்திடு மென்மொழியை யுத்தமர்தாங் கண்டு
திருக்கரத் தாலமைத்துச் சீர்சால் — குருபரன்
சிந்தைக் கினியபகர் செல்லப்ப தேசிகன்சொல்
விந்தைதருந் தேவமிர்த மே. 21

## கலித்துறை

அமிர்தாய் நிறைந்த தவராஜ செல்லப்ப ஆண்டவரும்
திமிராண வாதி செருக்கான முன்னர்த் திரித்த கற்றித்
தமசாந்தி பக்தி தருயோக ஞானந் தருவ தற்காய்த்
தமதா டெழுந்த அனுபூதி ஞானத்தைச் சாற்றுவரே. 22

## விருத்தம்

சாற்றுவேன் மைந்த வித்தைச் சாந்தமா யுணர வேண்டும்
தூற்றுறு தோடந் தன்னைத் துகளறத் துடைக்க வேண்டும்
வேற்றுள விகற்ப மெல்லாம் வேரறக் களைய வேண்டும்
தேற்றமா யுணர்வா யென்றுர் செல்லப்ப தேசி கேசர். 23

## ஆசிரியப்பா

தேசிக மகேச செல்லப்ப மணியே
வாசனை நாசமும் வன்மன நாசமும்
தீதறு தத்துவஞானத்தெளிவும்
போதமாய் நீயே புகட்டிட வேண்டும்

நாயினுங் கடையேன் நானே வறியேன்
தாயினுஞ் சிறந்தோய் தயவுசெய் தருளே
என்றுநான் பற்பல விரங்கி யுரைத்தேன்
நன்றுநன் றென்ன நாயகன் பார்த்துத்
தருண மிதுவெனச் சற்குரு விரங்கி
கருணையா லுரைத்த கதியினைக் கூறுவேன்
வரஞானம் வகுத்த மறைமுதல் கூறுவ
பிரக்ஞானம், பிரம மெனு மொழி யொன்றும்
சகமய லொழிக்கத் தத்துவர் பயிலும்
அகம்பிர மாஸ்மி அடுத்த மறைமொழி
வித்தக ஞானியர் விளக்கமாய்க் கூறும்
தத்துவ மசியெனுந் தனிமறை மூன்றும்
ஜயம்பெற ஞானியர் சந்ததம் போற்றும்
அயமாத்மாப் பிரமம் எனுமறை நான்காம்
இந்தநால் வாக்கி னிலக்ஷியம் வாச்சியம்
அந்தமா யுணர்ந்து அடுத்தன செய்வாய்
என்றுமே ஆசான் எடுத்து
நன்றெனக் குரைத்தார் நலங்கிளர் தவத்தரே 24

வெண்பா

தவத்தர் புகழுறுஞ் சற்குருவே என்றன்
அவித்தை யகற்றி யருளே—புவித்தலமேல்
என்போல வந்த எழிற்குருவே செல்லப்பா
வுன்போல ஆக்கவெனை யுன் 25

கலித்துறை

உன்னை லடைந்து முயர்மறை யாகம முற்றுணர்ந்தும்
என்னை லடையு மியற்கைய தாம்பத மெற்கருளாய்
பொன்னுர் மதில்பல சூழுநற் கானப்பேர்ப் புண்ணியனே
தன்னே ரிலாத தயாபர செல்லப்ப சற்குருவே 26

விருத்தம்

சற்குரு செல்லப் பாவுன் தாண்மல ரதனில் வைகும்
அற்புதப் பேறு பெற்ற அடியரி லொருவ னுக்கிச்
சிற்பர வியோமங் தன்னிற் றிளைத்திடச் செய்தே என்னை
நிற்குண சொரூப மாக நிலைத்திடச் செய்குவாயே 27

## ஆசிரியப்பா

செய்குவாய் ஞானம் செல்லப்ப நீயென
செய்யபொற் பாதம் சிரமுறப் பணிந்தேன்
அய்யனு மதற்கு அகமுக மலர்ந்தே
செய்ய ஞானத்தைத் தெவிட்டிட வுண்ணென
வடமொழி தென்மொழி வல்லசே ஷாத்திரி
திடமுள வேங்கடர் சிறப்புறு தத்துவர்
குமார தேவர் குருசாந்த லிங்கர்
எமாற்புகழ் சிதம்பர வீசனுந் தேசிகர்
நிஜகுண யோகியும் நித்ததாண் டவரும்
வசமா யுரைத்த வகைரத்தி னுவளி
இதமா யுரைத்த விங்கித வர்த்தம்
திதமா யுரைப்பன் செவிமடுத் துணரென
எற்குள மேற்க வெடுத்து
விற்பன மாக விரித்துரைத் தனரே 28

## வெண்பா

உரைத்தாறு நாலஞ்சு வொன்றுருகுந் தேகம்
திரித்தான தத்துவங்கள் சீர்சால்—திரித்தவத்தை
சொப்பனமே சாக்கிரமே சொல்சுழுத்தி முச்சீவன்
விப்பிரஞ்ஞு தைஜதவிஸ் வன் 29

## கலித்துறை

விசுவாதி சிவர்க் கதிஷ்டான மான வியனறிவும்
பசுவாம் பதவாச் சியப்பொருட் பண்பிது வாகுமென்றூர்
பசுபாச மாயையை நீத்துப் பரபத வாழ்வருளும்
விசுவேச ரூபத்தைச் செல்லப்ப தேவர் விளம்புவரே 30

## விருத்தம்

விளம்புவார் செல்லப் பேசர் விராட்டுட னிரண்ய கர்ப்பம்
களமிலா வவ்வியா கிருதம் கருதுமுத் தேக மாகும்
அளவறு சிருட்டி காவல் அழித்தல்மூ வவத்தை யாகும்
வளவைஸ்வா னரன்சூத் ராத்மா வருமந்தர் யாமி மூவர் 31

---

28. எம்மால் என்பது 'எமால்' என நின்ற திடைக்குறை.

## ஆசிரியப்பா

மூவரீ சர்க்கும் முதலதிஷ் டான
மாவரு பிரமம் மாண்பமை பத்தும்
தத்பத வாச்சியத் தன்மை யிதுவென
அத்வைத நூலோ ரனைவருங் கூறுவர்
அவத்தை மூன்றையு மறியுமான் மாவே
துவம்பத லக்ஷிய மாகச் சொல்லினர்
தரம்பெறு பிரமம் தத்பத லக்ஷியம்
திறமா யிதனைச் சிந்தையிற் கொள்ளே
காய்ச்சிய பாலின் நெய்யெனக் கலந்து
வாச்சியந் தன்னில் வயங்கும் லக்ஷியம்
ஆச்சியங் கொள்ளு மறிவினர் போல
பூச்சியப் பிரம கூடத்தப் பொருளைக்
காட்சிய தாகக் கருத்தினிற் கண்டு
மீட்சிபோக் கின்றி மிளிருதி யென்றார்
எளியனை யாளு மியற்செல் லப்பர்
அளியொடுங் கூறி ஆதரித் தாரே
தெளிவிலர் யாருந் தெளிய
களிகொளுங் கானப் பேருறை கர்த்தரே 32

## வெண்பா

கருத்தராஞ் செல்லப்பர் காரணங் காட்ட
அருத்தமா யானுமறி கில்லேன் – திருத்தமாய்த்
தேறித் தெளியத் திரும்பவுநீ கூறென்றேன்
ஆறியான் மாவிலம ர 33

## கலித்துறை

அமரவே யாண்ட அருட்குரு செல்லப்ப ஆரியனே
மமர்மய லாதிய தோற்றங்க ளற்று மதிகுளிர்ந்து
எமதுயா னென்னு மிருவா தனையற்று இன்பமதில்
அமர வருள்புரி யானந்த மெய்ப்பொரு ளானவனே 34

## விருத்தம்

ஆனவன் அகில லோக மாக்கிடு மவனி நாதன்
மானவன் மனிதர் யார்க்கும் மறைமுத லோது போதன்
வானவர் மதிக்கும் ஞான வள்ளலாஞ் செல்லப் பேசன்
கானனீ ரென்னக் கண்டு கழித்திடிவ் வுலக மென்றான் 35

## ஆசிரியப்பா

உலகமென் றுரைத்த வுரைப்பொருள் கருதின்
உலகெலாந் தோற்றி யொடுக்குவ துளமே
மனமே மாயை மனமே ஜகத்து
மனமே திருஷ்டா மனமே திருஸ்யம்
மனமே ஞாதா மனமே ஞேயம்
மனமே கர்த்தா மனமே கர்மம்
மனமே போக்தா மனமே போக்கியம்
மனமே தியாதா மனமே தியேயம்
மனமே தத்பதம் மனமே தொம்பதம்
மனமன மெங்குள மாயையு மங்குள
மனமன மெங்கிலை மாயையு மங்கிலை
மனமாயை மாயை மற்றிலை மாயை
மனமாயை நீத்தால் மற்றெலாம் நீத்தாய்
தனையாய்ந் திருத்தல் தத்துவ மாகும்
பிணையாய்ந் திருத்தல் பிதற்றுதல் ஆகும்
தொம்பத லக்ஷியச் சோதிதப் பொருளே
தற்பத லக்ஷியச் சாஸ்வதப் பொருளென
அடுத்துக் காட்டலே அஸிபதப் பொருளாம்
எடுத்துனக் குறைத்தேன் இதுவே மறைமொழி
முப்பதப் பொருளும் முடிவா யுரைத்தேன்
அப்படி யேதான் அடுத்தவாக் கர்த்தம்.
செப்படி போலத் திரித்துனக் குரைத்தேன்
நாமரூப செகமிவை நோக்கிடின்
நாமம் சொன்மயம் ரூபம் சின்மயம்
இருந்து தோன்றின் இன்பமு மாகும்
பொருந்த நோக்கின் பொருளொன் றாகும்
இருப்பெங் குளவோ எல்லாம் சத்தே
விருப்பெங் குளவோ வியன்சுக மதுவே
தோற்றஞ் சித்தின் சொரூப மாகும்
வேற்றுரை என்ன விளம்ப வேண்டும்
சச்சிதா னந்தத் தனிப்பரம் பொருளே
அச்சமில் லாமல் அகமென வுணர்வாய்
வித்தையு மிதுவே வேதங்கள் கூறும்
அத்வைத ஞான மாவது மிதுவே
சாங்கியம் யோகம் தர்க்கமீ மாம்சை
பாங்கதாய்க் கற்றுப் பார்ப்பது மிதுவே
ஆகம புராண மறைவது மிதுவே

பாகமாய்ச் சமயிகள் பகர்வது மிதுவே
இத்தில் ஐயம் இறையும் வேண்டாம்
சத்தியம் செய்து சாற்றினர் வேதா
என்றனர் செல்லப் பேசதே சிகரே
நன்றுநன் றென்று நாயேன்
ஒன்றவே நெஞ்சி லுணர்ந்துகொண் டேனே 36

## வெண்பா

கொண்டேன் குருபதத்தைக் கோதிலருட் செல்லப்பா
விண்டேன் புறமதத்தார் விள்ளுவதை — யொண்டேனைச்
சித்தமதி லுண்டு சிவமாகி நின்றிடயான்
அத்தவுன தின்னருளால் ஆள். 37

## கலித்துறை

ஆளா திருப்பி னடியேன் மனமு மலைந்துவிடுங்
கோளாதி வந்து குணமுங் குறியும் குலைத்துவிடும்
மீளாப்பதமதில் மேலாக நின்றுமெய் வீடடையத்
தாளே கொடுத்தெனை யாண்டிடு செல்லப்ப சற்குருவே. 38

## விருத்தம்

சற்குரு வென்பா ருள்ளங் தனித்துயர் பதத்தில் வாழும்
சற்குரு வென்பார்க் கென்றுஞ் சங்கட மருகும் வாரா
சற்குரு மூர்த்தி தீர்த்தந் தலமுடன் பிரம மாகும்
சற்குரு வருளைப் பெற்றூர் சகலமும் பெறுவர் தாமே. 39

## ஆசிரியப்பா

தாமே பெறுவர் சாயுக்ஷ்ய மோக்ஷம்
பூமேல் வேண்டும் பொருளும் பெறுவர்
சற்குரு செல்லப்பர் தாண்மலர் புனைவோர்
விற்பன விவேக விரத்தர்க ளாவர்
சொற்பதங் கடந்த தூயமெய்ஞ் ஞானம்
அற்புத மாக அடைந்துமே வாழ்வர்
தத்பதந் துவம்பதந் தனித்துயர் சாக்ஷியாய்
நிற்பதா மோக்ஷம் நிமிடமாய்ப் பெறுவர்

சற்குரு வருளாற் சாற்றினே னித்தை
நற்குணஞ் சிறிதுமில் நாயினுங் கடையேன்
சொற்பய னறிந்தோர் சுகித்துணர் வாரே.

சற்குணக் கடலாய்த் தவப்பெருங் குன்ருய்ச் சாந்தமே
யுருவமாய்த் திகழும்
விறபன விவேக விரத்தர்கள் புகழும் விமலனே
ஞானதே சிகனே
கற்பனை கடந்த கருணைமா நிதியே கதியிலா
நாயினேன் றனக்குன்
சொற்பதங் கடந்த நற்பதந் தருவாய் சோதியே
செல்லப்ப மணியே.

தாயிற் சிறந்த தயவுடைய சற்குருவை
வாயினு லெப்பொழுதும் வாழ்த்து.

திருச்சிற்றம்பலம்.



உ

# ஸ்ரீ சற்குரு பாமாலை

## கணபதி வணக்கம்

மூவர்கள் பாடல் பெற்ற முதன்மைசேர் கானப் பேரிற்
தேவர்கள் தேவன் றானே தேசிக னாக வந்தான்
பாவல ரவர்க்குச் சூட்டப் பாலகன் விருப்ப முற்றேன்
காவல தாக வேண்டுங் கஜமுகன் கழல்கள் தானே

## பஞ்சமூர்த்தி வணக்கம்

வணங்கிடு மடியார்க் கருள்புரிஞான
வாரண முகவனை வணங்கார்
வணங்கெட வடிவேல். விடுத்த மெய்க்குகனை
வார்சடைக் காளீயிசுரனை
வணங்கிடு மயன்மா லவர்க்கருள் புரியும்
வல்லியாஞ் சுவர்ண நாயகியை
வணங்கிரு பையதாஞ் செல்லப்ப ஞான
வள்ளலை வணங்கியே துதிப்பாம் 2

வானவர் முனிவர் மானவர் பரவும்
வாரண முகமதார் தேவை
வானவர் பகைவ ரானவர் மடிய
வடித்தவேல் விடுத்திடு குகனை
வானதி சூடுங் காளியெம் பரனை
வார்குழல் சுவர்ணநா யகியை
வானவர் பரவும் ஞானசெல் லப்ப
வள்ளலை வணங்கி வாழ்த்திடுவாம் 3

---

1. பாவலர் = பாமாலை
2. வணங்கார் = சத்துருக்கள். வணங்கெட = வடிவம் நசிக்க. வணங்கிருபையதாம் = கிருபா சொருபாமாகிய.
3. மானவர் = மனிதர். வடித்த = கூர்மை பொருந்திய.

## குருவின்சீர்பாத வல்லபம்

நாயினுங் கடைய நியனை ராம
நாயக னூரினுக் கனுப்பி,
தாயினுஞ் சாலப் பரிந்தமு தளித்துத்
தனிமரு தூரினில் விடுத்து
மாயிரு ளகலத் திருநல்லூர் வந்து
வாவென வலிந்தழைத் தாண்டு
சேயெனைக் கானப் பேர்தனிற் காத்த
செல்லப்ப குரவர்சீர் பதமே 4

## குருஸ்துதி

அக்கர வடிவே யருமறைப் பொருளே
யடியவர்க் கருள்புரி யருளே
துக்கரங் குறியில் குறியதாய் நின்ற
சோதியே சோதிமா வனத்திற்
புக்கிருந் தடியார்க் கருளுமெய் யின்பப்
போதமே போதமில் லடியேன்
சிக்கறுத்தாண்ட செல்லப்ப ஞான
தேசிகச் செல்வமே சிவமே 5

### வேறு

ஆண்ட குருவே மறைமுடிவே யடியார்க்
கருளு மாரமிர்தே
தூண்டல் செய்யா மணிவிளக்கே சோதி
வனத்தி லுறைசிவமே
காண்டற் கினிய திருவுருவே கண்ணின்
மணியே யுன்னடிமை
பூண்டு கொண்டேன் செல்லப்ப பொற்றுள்
போற்றி போற்றியவே 6

---

4. ராமநாயகனூர் = இராமேஸ்வரம். மருதூர் = நயினார் கோவில். நல்லூர் = இளையான்குடி. கானப்பேர் = காளையார்கோவில்.

5. அக்கரம் = அக்ஷரம் (நாசமில்லாதது) துக்கரம் = அறிதற்கரியது. சோதிமாவனம் = காளையார்கோவில் போதமில் = விவேகமில்லாத. சிக்கறுத்து = தடைகெடுத்து.

வேறு

இன்பிருப் பொளியாய் இலங்கிய பொருளே
யென்றுமெவ் விடத்தினும் தோன்றும்
துன்பிருப் பில்லாத் தோற்றர வற்ற
சொல்லொணுப் பொருளெங்ஙன், தோன்றும்
அன்பிருந் தனிச முசாவிநீ யுணர்தி
யனுபவ மாகவென் றுரைத்துப்
புன்பிறப் பறுத்த செல்லப்ப தேவன்
பொன்னடி முடிமிசை புனைவாம். 7

ஈறொடு தோற்ற மின்றியே யிலங்கி
என்கணி லுறைந்திடு மிறையை
ஆறொடு கொன்றை யனல்விழி மழுமா
னகன்சடை யானென முமையோர்
கூறதை நீக்கிக் கூறுமெய்ஞ் ஞானக்
கோலமாய்க் கொடிய வன்பிறப்பை
நீறுசெய் தளித்த செல்லப்ப குருவை
நிதநிதம் பணிந்திட ரொழிப்பாம். 8

உத்தம குருவே யுயர்மறைப் பொருளே
வும்பரு முணர்வதற் கரிய
சத்திய ஞான சுகவடி வான
சாந்தமே சாந்தமெய் யடியார்
சித்தமே கோயி லெனக்கொண்டு வாழுந்
தேசிகா செல்லப்ப மணியே
பத்தியி லடியேன் புத்தியி லுகந்துன்
பதமதை யளிப்பதென் றெனக்கே. 9

வேறு

ஊனக் கண்கொண்டு வொன்றையு நோக்கனீ
ஞானக் கண்கொண்டு நற்பொருள் நாடென்றுன்
வானக் கண்ணுறை வார்க்கு மறியொணு
ஞானக் கூண்ணுறை செல்லப்ப நாதனே, 10

---

7. சொல்லொணு நவவிதத்திலும் நிரணயித்துக் கூற முடியாத. அனிசம் = நாள்தோறும்.

8. என்கணில் = எனது அறிவில். (அதாவது அகண்டாகார விருத்தியில்)

என்னை நோக்கி யிருந்தறி கின்றிலே
என்னை நோக்கி யிருந்தழி கின்றனை
என்னை நோக்கொன்று வின்பம தாகவென்
றென்னை நோக்கின னெந்தை செல் லப்பனே 11

ஏத மற்றவி ரோதம தாகிய
போத முற்றுப சாந்தம தாயிரு
காத லற்றிடு வென்றுரை செல்லப்ப
நாத னற்கழல் நாடொறு மேத்துவாம். 12

வேறு

ஐயனே மறைகள் தேடும்
அத்தனே யறிவாஞ் சோதி
மெய்யனே மெய்யி லாத
வினையினேன் றனையு மாண்ட
செய்யனே செய்ய ஞான
தேசிகா செல்லப் பாவுன்
பொய்யில்சீர் பதங்க ளென்மேற்
புனைந்தருள் போற்றி போற்றி 13

ஒளிமதிமுடித்த வேணி யொருவனே
கருணை கூர்ந்து
அளியதே யுருவாக் கொண்டு
அருமறை முடிவை யோதி
களிகொளுங் கானப் பேரிற்
காட்சிதந் தெனையாட் கொண்டு
வெளியதே யுருவாய்ச் செய்த
வியன்குரு சரணம் போற்றி 14

---

11. என்னை = தத்பத வக்ஷிய பிரம வடிவ என்னை. நோக்கி = உனது நிசரூபமாகக் கருதி, இருந்து = தியான யோகத்தை அநுஷ்டித்து நின்று (சமாதியுற்று). என்னை நோக்கி = யாது கருதி. என் ஐ = யாது சந்தேகம். நோ = துன்பம். (அனர்த்தத்தை) கொன்று = கெடுத்து. இன்பம் = ஆனந்தத்தை. ஆக = அடைய. என்னை = சிவரூப என்னை. நோக்கினன் = கிருபையோடு பார்த்தார்.

14. அளியதே = கருணையே

வேறு

ஓரில்வே தாந்த நாலுரை பொருளே
யுயர்மறை யாகமப் பொருளாம்
பாரில்வே ருகப் பகருநூற் பொருள்கள்
பாகமில் சித்த்ரைக் குறித்தாம்
தேரிநீ யிதனை யறிதியென் றுரைத்த
செல்லப்ப ஞானதே சிகரின்
சிரிய பதத்தை நினைந்துநைந் துருகித்
தினந்தினம் பணிந்திட ரொழிப்பாம் 15

ஔவிய முடைய வகமதி லான்மா
வழுக்குறு ஆடியில் முகம்போற்ற
செவ்விதிற் றேன்றுப் போகத்தி னிச்சை
சிந்தனை வாதனை யிவற்றுற்
கௌவுறு பொருளிற் பற்றுதல் நீக்க
லாகிய வனைத்தையுங் கடந்தாற்
செவ்விதிற் றேன்று மென்றுரை செய்த
தேசிகன் திருவடி பணிவாம் 16

வேறு

கண்டே னெனதுரு வாகிய சோதியைக் காசினி யோர்
கொண்டாடு கின்ற திருக்கானப் பேரிற் குருவடிவாய்
விண்டே னெனதுட லாதிய வானவி யாதியெல்லாம்
உண்டேன் பிரம சுகமதை யானு முவந்தனனே 17

நப்போல் வளையென்று சொல்லிய செல்வியின் ஞானமதைத்
தப்பா துணர்ந்தொரு தானு யிருந்தொளிர் தன்மையினை
யெப்போது மெல்லாமெ னுள்ளே யிருந்த வியல்பையொரு
செப்பா லுணர்த்தினன் செல்லப்ப ஞான சிகாமணியே 18

சற்று யினுமொரு சிந்தனை வாதனை சார்ந்ததெனிற்
பற்று மதுவது வேபிறப் பாந்துன்பம் பாழ்மனமே
எற்று யினுமொரு சிந்தனை சார்வதற் கெண்ணுவையேல்
பற்று மெனவிறை செல்லப்ப தேவன் பதம்பணியே 19

ஞயமா னதுபுனை கல்வியும் ஞானமு நற்றவமும்
பயமா னதுபுனை சித்தியு முத்தியும் பார்தனிலே

---

16. ஆடி = கண்ணாடி
18. ஒரு செப்பால் = ஒப்பற்ற மகாவாக்கியத்தால்.
19. பற்றும் = ஆதாரமாம்.

சுயமா யருள்தருஞ் செல்லப்ப தேவன் துணையடியை
நயமா னதுபுனை பத்தியி னித்திய நாடுவனே, 20

டமருக மான்மழு வேந்திய சங்கரன் தாரணியில்
அமரு கலியுக மாகிய போதிலும் அஞ்ஞ னவன்
முமர மழித்தருள் சற்குரு செல்லப்ப மூர்த்தியதாய்
அமர விருந்தவ னம்போ ருகமுடி சூடுவனே. 21

வேறு

இணங்குமெய்ஞ் ஞான வடிவமா யிலகி
யென்றனை யாண்டசற் குரவன்
வணங்குமெய் யடியார்க் கருள்தரு புனிதன்
வானவர்க் கறியொணு முதல்வன்
சுணங்கனிற் கடைய ஞகிய வெனையுந்
தொண்டருட் கூட்டிய துறவோன்
வணங்குறு ஞான செல்லப்ப தேவன்
மலரடி முடிமிசை வைப்பாம். 22

வேறு

தந்தையாய்த் தாயு மாகிச் சார்ந்திடுங் கதியுமாகி
அந்தமத் தியமோ டாதி யாகிடா வின்ப மாகி
எந்தமா ருயிருமாகி யியைந்த செல்லப்ப ஞானச்
சுந்தர குரவன்பாத துணைமலர் முடிமேற் கொள்வாம். 23

வேறு

நறைமலர் க்மழும் நந்தன வனமும்
நாயகன் கோவிலும் மடமும்
மறைபயி லிடமும் நிறைநிறை மருவ
மாண்பமை கானப்பேர் நகரில்
உறைதரு மடியார் உறுதவ மனைத்து
மோருரு வெடுத்தவர் பவமாஞ்
சிறைதவிர்த் தாண்ட செல்லப்ப ஞான
தேசிகர் திருவடி பணிவாம் 24

---

20. பயமானது புனை = பிரயோசனம் பொருந்திய. நயமானது புனை = பேரின்பத்தை முடிவாகத் தரவல்ல.
21. அம்போருகம் = தாமரை

வேறு

பந்த மாமிருள் பற்றற நீங்கிடச்
சிந்தை யாரச் சிவமது தோன்றிடத்
தந்தை செல்லப்பர் தாளிணை தந்ததால்
அந்த நற்கழ லன்பொடு போற்றுவாம் 25

வேறு

மல்லலம் பொழில்சூழ் கானப் பேர்தனில் மன்னி வாழும்
செல்லப்ப தேவ னென்னுந் தேசிகன் பாதப் போதை
அல்லுநற் பகலு மாறா தகத்தினுஞ் சிரத்துஞ் சூடும்
நல்லவர் பாதம் நாளும் நாடிநின் றிறைஞ்சு வோமே 26

வேறு

இயல்பலா தனவே செய்துபுன் பிறப்பு
மிறப்புமே யெய்துவேன் றன்னை
யியல்பதாம் ஞானச் சுவைநிறைந் தகத்தும்
புறத்துமே யின்புரு வான
இயல்பினை யறிந்தே காந்தமே நண்ணும்
இரும்பெருந் தவரொடுஞ் சேர்த்து
இயல்பதாம் பதத்தி லிருக்கவைத் தாண்ட
எழிற்குரு சரணமே போற்றி 27

வேறு

அரவா பரணத் திருமார்பு மனல விழியும் மழுமானும்
கரமோர் நான்கும் கறைமிடறும் கரந்து கருணைத்
திருவுருவாய்
வரமா ரயன்மால் வானவர்கள் வணங்குங் கானப் பேரூரில்
வரதா ஞான மணிவிளக்கே வாழி வாழி நீடூழி 28

வேறு

லம்பிகை யாதி யோகங்கள் செய்து
யானுடற் றிறமைபெற் றில்லேன்
அம்பிகை யாதி தேவுபா சனையா
லசைமன வொருமையு மில்லேன்

---

27. இயல்பலாதன = தகுதியற்றவைகளை இயல்பதாம் = பண்பான. இயல்பினை = இயற்கையினை. இயல்பதாம் = சுபாவமாகிய.

தம்பமா மூட மதியெனை யாளத்
தகுவது முன்பர மன்றோ
உம்பரும் பரவுஞ் சோதிமா வனத்தி
லுறைந்தருள் சற்குரு மணியே 29

வேறு

வள்ள லென்றுரை செய்பவர் யாரெனில்
வெள்ள ஞானம் விளக்குவோ ராதலால்
தெள்ளு ஞானச் சுடர்செல்லப் பேசனே
வள்ள லென்றுள்ளி வாழ்த்தி வணங்குவாம் 30

அழக லாதன செய்துழல் கின்றனன்
அழகி தான திதுவென் றறிகிலேன்
அழகி தென்றுணர் வித்தெனை யாள்வையோ
அழகர் சூழ்காளை யார்கோவி லாண்டவா 31

இளமை யும்மனை யாதிய வேடணை
வளமை யுந்துறந் துன்னை வணங்குவார்
அளவை யுத்திக ளாலறிந் தாறுவார்
அளவில் சோதி வனத்துறை யாண்டவா 32

அறம்பொரு ளின்பம் வீடென் றருமறை
அறைவ துன்ற னடியிணை யாதலால்
நறைம லர்ப்பத நாடிட நல்குவாய்
அறைபு னற்றிருக் கானப்பே ராண்டவா 33

அனந்த னும் அருமறை யானுமிம்
மனந்த னும் மதிக்கொணு வான்பொருள்
எனந்த மான வியல்பளித் தாட்கொளச்
சனந்த னற்புகழ் சற்குரு வானதே 34

---

29. தம்பமாம் = வஞ்சகம் நிறைந்த.

31. அழகலாதன = பழிக்கத் தக்கவைகள். அழகி தானது = புகழத் தக்கது. அழுகிது = பண்புடையது இது. அழகர் = ஒழுக்கமுடையவர்.

32. அளவை = பிரமாணம்.

34. எனந்தமான = எனது முடிவாயுள்ள. இயல்பு = சுபாவ சொருபத்தை, சனந்தனற்புகழ் = சர்வசனப் பிரியத்வம் பெற்ற

வேறு

சற்குரு செல்லப் பாவுன் தண்ணரு ணிறைவினாலே
நற்குணச் சித்த சுத்தி நலமுறு பத்தி யுத்தி
சிற்சட விவேக ஞானஞ் சின்மய நினைவு மோனம்
நிற்குண விதேக முத்தி நிலையினை யளித்தி டாயே 35

வேறு

சித்தி தருந்தெய்வம் செல்லப்ப தெய்வம்
பத்தி தருந்தெய்வம் பரதெய்வம் தெய்வம்
மெத்திய ஞானத்தை விளக்கிடுந் தெய்வம்
சத்திய ஞானமார் சற்குரு தெய்வமே 36

கத்திய பத்தியங்கள் உழறிடுந் தெய்வம்
ஹத்தி முதற்பவ மகற்றிடுந் தெய்வம்
குத்திர மத்திபர் குறுகொணாத் தெய்வம்
சித்தர் புகழ்குரு செல்லப்ப தெய்வமே. 37

நித்தியா நித்தியங்கள் நிகழ்த்திடுந் தெய்வம்
மத்திய விகபரம் மாற்றிடுந் தெய்வம்
சத்திய சமமாதி சாற்றிடுந் தெய்வம்
முத்தி விரும்பினர் முன்னிற்குந் தெய்வமே. 38

புத்தி தருந்தெய்வம் புண்ணிய தெய்வம்
யுத்தி யனுபவம் உரைத்திடுந் தெய்வம்
சுத்தி யடைந்தவர் தொழுதிடுந் தெய்வம்
சத்திய செல்லப்ப சற்குரு தெய்வமே. 39

சத்துவ குணத்தவர் சார்ந்திடுந் தெய்வம்
கத்துரு போத்துரு கழற்றிடுந் தெய்வம்
மித்துரு வானவர் மேவிடுந் தெய்வம்
சித்துரு வாகிய செல்லப்ப தெய்வமே 40

---

35 தண்ணருள் நிறைவு = பரமசீதள பரிபூரண கிருபை. நற்குணம் = சத்துவகுணம் மேலிடுவதற்கான. சின்மய நினைவு = சின்மாத்ர வாசனை.

36. மெத்திய ஞானத்தை = மேலான பிரஹ்மான்ம வைக்கிய ஞானத்தை.

37. கத்தியம் = வசன சாதுர்யம். பத்தியம் = கவி சாதுர்யம். ஹத்தி முதற்பவம் = பிரமஹத்தியாதிய தோஷங்கள்.

உத்தமர் போற்றிடு முயர்குணத் தெய்வம்
பத்தர்கள் போற்றிடும் பாவன தெய்வம்
மத்தர்க ளறியொண்ணு மாசிலாத் தெய்வம்
சித்த மதிலுறை செல்லப்ப தெய்வமே. 41

மண்ணவர் போற்றிடும் மாசிலாத் தெய்வம்
பண்ணவர் போற்றிடும் பண்புடைத் தெய்வம்
கண்ணுறை மணிநிகர் காரண தெய்வம்
திண்ணமாய் நான்றொழுஞ் செல்லப்ப தெய்வமே 42

சாதனஞ் சாற்றிடுஞ் சன்மார்க்க தெய்வம்
ஆதனஞ் சாற்றிடு மாரிய தெய்வம்
வேதனஞ் சாற்றிடும் விகிதராந் தெய்வம்
சேதன சற்குரு செல்லப்ப தெய்வமே 43

சங்கற்ப சாலத்தைத் தவிர்த்திடுந் தெய்வம்
பங்குற்ற சகசிவ பரமாகுந் தெய்வம்
மங்குற்ற மனமயல் மாற்றிடுந் தெய்வம்
எங்குரு செல்லப்ப இறைவனுந் தெய்வமே 44

நிகள வடிவர்கள் நேசிக்குந் தெய்வம்
சகள மனமதின் சாக்ஷியாந் தெய்வம்
உகளு மனமதை யொடுக்கிடுந் தெய்வம்
நிகழ்குரு செல்லப்ப நித்திய தெய்வமே 45

நாயனை யாண்டிடும் ராமேச தெய்வம்
தீயனை யாண்டருள் நாகேச தெய்வம்
ஏயனே ராண்டிடும் ராஜேந்திர தெய்வம்
சேயெனை யாண்டருள் செல்லப்ப தெய்வமே 46

வேறு

ஏடறியே னெழுத்தறியே னிறைவா போற்றி
பாடறியேன் படிப்பறியேன் பரமா போற்றி

---

41. மத்தர்கள் = உன்மத்தர்கள்
44. பங்குற்ற = பிரிவுற்ற.
45 நிகள வடிவர்கள் = நிர்க்குண சொருபக் ஞானிகள்.

நாடறியே ஞனறியே ஞதா போற்றி
தாடலேமேல் வைத்தாண்ட தகவோய் போற்றி 47

நலம்பொழியு நற்பொருளே நத்துமிகுந் தத்துவனே
தலஞ்செறியுந் தற்பரமே தனிமுதற் றயாநிதியே
சலஞ்சொரியு மாமதியே சற்கருணை மாமுகிலே
புலஞ்செறியுஞ் செல்லப்ப புண்ணியநின் கழல்
போற்றி 48

வேறு

எண்ணுவே னுயிரெ டுத்து எழுதுவே னுருவெ டுத்துப்
பண்ணுவேன் பெயரெ டுத்துப் பரமகுரு நாத சுவாமி
எண்ணியே நைந்து நைந்து இதயம்புண் ணுகு தையா
கண்ணினுற் காண நீயுங் காட்சிதந் தருளு வாயே 49

வந்தனை யுனக்குத் தந்தேன் மனத்தெளி வெனக்குத் தாராய்
சிந்தனை யுனக்குத் தந்தேன் சிதமய லெனக்குத் தீராய்
பைந்துணர் உனக்குத் தந்தேன் பரவுணர் வெனக்குக் கூறுய்
எந்தனை யாண்டதேவா எழிற்குரு செல்லப்ப பேசா. 50

---

47. ஏடு = 1. சுவடி 2 உடல். எழுத்து = 1. அக்ஷரவடிவ லிகிதம் 2. அக்ஷரவடிவப் பிரஹ்மம். பாடு = 1. உழைப்பு 2. உன் பெருமை. படிப்பு = 1. கல்வி 2. வணக்கம் நாடு = 1. உலகவியல் 2. விசாரலக்ஷணம். நான் = 1. அகங்காரவியல் 2. ஆன்மலக்ஷணம். தாடலேமேல் வைத்து = 1. திருவடி தீக்ஷை செய்து 2. பிரஹ்மான்ம ஐக்கிய ஞானம் எனது இருதயத்திலுதயமாகும் வண் ணம் பிரதானமாகத் தமது திருவுளத்திற் கருதி.

48. நலம் = ஆனந்தம். நத்தும் = சர்வஜனப்பிரியத்தவம். தத்துவன் = பிரஹ்மசொருபன். தலஞ்செறியும் = உலகில் பரிபூரணமான. சலம் = சந்திர கலாமிர்தம் புலஞ்செறியும் = ஞானபூரணரான.

49. எண்ணுவேன் = எனது மனத்தால் தியானம் செய்வேன். உயிரெடுத்து = உனது ஆன்மசொரூபத்தை விசேடமாகக் கருதி. எழுதுவேன் = எனது கையால் சித்தரிப்பேன். உருவெடுத்து உனது திருமேனியை விசேடமாகக்கருதி. பண்ணுவேன் = செபிப்பேன். பெயரெடுத்து = உனது திருநாமத்தை விசேடமாகக்கருதி (பரமகுருநாதசுவாமி)

எழுபிறவிப் பேராற்றி லெடுத்துழன்ற செனனமதை
எண்ண லாமோ
பழுதுடைய வவற்றவற்றில் பட்டதுயரின் னவெனப்
பகர லாமோ
வழுவதென வகற்றியநின் வள்ளன்மை யென்னவென
வழங்க லாமோ
தொழுதகைய செல்லப்ப சோதியுன தின்னருளே
தொழுவே னுனே 51

கணபதி பிரமன் மாயன் கண்ணுதல் படைப்பி லிந்தப்
பணபதி சிரங்க ளாலே பாரித்த புவியி லிந்த
வணமென மதிக்கொணுத மறைப்பொருள் மனிதனுகிக்
குணபதி செல்லப் பேசக் குருவென வந்த தம்மா. 52

சத்திய ஞான னந்த சற்குரு சரணங் தன்னிற்
பத்தியாய்ப் பாடு மிந்தப் பாக்களைப் பாடு வோர்கள்
சித்தியும் புத்தி யோடு செல்வமும் புகழும் பெற்று
நித்திய வாழ்வும் பெற்று நிரந்தரம் வாழ்கு வாரே. 53

திருச்சிற்றம்பலம்.

---

50. சிதமயல் = மனமயக்கம்.
52. பணபதி = ஆயிரம் பண மகுடங்களையுடைய ஆதிசேஷன்.
இந்த வணமென = இவ் வண்ணமென்று
குணபதி = சகலகுண கணுலங்கிருதரான.



உ

# அனுபூதி மாலை

## பாயிரம்

### கணபதி வணக்கம்

அத்தி முகனே அரனுர் திருமகனே
சத்தி புதல்வனே சங்கரனே – யித்ததியில்
ஏழையேன் பாடு மியற்பா வினிதருள்வாய்
மாமைமணி மேனியனே வந்து.

### பஞ்சமூர்த்தி வணக்கம்

கணபதியே கந்தனே கல்லா லமர்ந்த
குணபதியே சத்தி குருவே – கணமதினுன்
ஏற்றுபா வத்தனையு மின்றமிழால் நன்கமையச்
சாற்றுவீர் நாமனத்திற் ருன் 2

### சத்தி வணக்கம்

வாலை புவனை வராகி திரிபுரையே
காலையு மாலையுமுன் கால்பணிவேன் – ஏலவே
என்ரு லெடுத்துரைக்கு மின்றமிழ்ப்பா வத்தனையும்
உன்னுல் முடித்தருள வுன் 3

### குருவணக்கம்

செல்லப்ப தேசிகர்தாள் சிந்தைதனில் வந்திக்கில்
அல்லற் பிறவி யகன்றிடுமே – மெல்லக்
குருவே குருவே குருநாதா வென்ருல்
உருவா யுளத்துதிக்கும் உன் 4

ஐயா பரசிவமே அன்னையே சற்குருவே
மெய்யாக வோர்சொல் விளம்பறியாப் பொய்யனும்

என்னுலே பாடுகின்ற வின்னூலை—யுன்ருளிற்
பொன்னுர மாலையெனப் பூண் 5

## அவையடக்கம்

கற்றவர்க ளுள்ளமதிற் கண்டதொரு நற்பொருளை
மற்றவர்க ளுற்றறியா மாமணியைச்—சற்றெனது
சொல்லா லெடுத்துத் துலக்க நினைத்ததுதான்
புல்லாற் கடல்கடைந்தான் போன்ம் 6

தாயிற் சிறந்த தயவுடைய சற்குரவன்
நாயிற் கடையேன்றன் நாவிருந்து தூய்தாய்
எடுத்துரைத்த வாசகமா மின்னூ லகத்து
அடுக்குமோ குற்றம் அறி. 7

## நூற்பயன்

அனுபூதி மாலை யடைவுடனே நாளும்
அனுபூதி யாக வறிந்தால் — தனுகரண
போகநிலை தீர்ந்தோங்கு போதநிலை தான்பெற்றுச்
சோகநிலை தீர்வரெனச் சொல். 8

சத்தியமா யின்னூலைச் சந்ததமுங் கற்றிடுவோர்
முத்த ரெனமொழிவர் மூதறிஞர் — பத்தியமாய்த்
தேவ ரமுதைத் தினமு மருந்திடுவோா
சாவகன்று நிற்பதுபோற் ருன் 9

## திருச்சிற்றம்பலம் நூல்

சித்தே மனமாய்ச் செகசிவ ரூபமாய்ச்
சத்தே சகலமுமாய்ச் சார்ந்ததே — சுத்தசுக
ஆனந்த மேபொருளா யத்துவித மானதால்
தானந்த வத்துவின்ருள் சார். 10

கற்குங் கனபொருளுங் கற்றுணரும் நற்பொருளும்
நிற்கும் பொருளும் நினைபொருளும் — சற்குருவாய்
வந்த பொருளும் வரமான சிற்பொருளும்
எந்தனுளம் நின்றபொரு ளே. 11

ஆகமா யாருயிரா யஞ்ஞான மேகடந்த
போகமாய் ஞானப் பொருளாகி — யேக
வெறுவெளியாய் நின்ற விமலனே நாளுங் 12
குருவடிவா யென்றனுளங் கொள்.

சித்தாகி நின்றதனாற் சிவசக மாய்விளங்குஞ்
சத்தாகி நின்றதனாற் சாஸ்வதமாம் — சுத்தசிவ
ஆனந்த மானதனா லார்வமுற வந்ததுவாம் 13
தானதுவாந் தத்துவமே தான்.

என்னமோ ஏதோ இதுவோ அதுவோவென்
றுன்னேநீ சங்கித் துழலாதே — முன்னமறை
ஆசானும் நீயே யதுவென்று சொன்னமொழி 14
கூசாம லுன்றனுளங் கொள்.

காலங் கடந்த கருணை சொருபனெவன்
ஆல முகந்த அருளனவன் — சீலமுறு
தேசிகனாய் வந்து சிவனீயே யென்றானே 15
நேசியவ னன்வாக்கை நீ.

சித்தேநீ என்றுரைத்த தேசிகனைப் போற்றாதே
பித்தேநீ கொண்டு பிதற்றாதே — சுத்தசுக
வாரிதியை யுற்று வளைபிறவி மாற்றவெனின் 16
ஆரியன்றா ளெப்பொழுதும் அண்டு.

எங்கும் நிறைந்தபொரு ளென்சொருப மென்றுரைத்த
பொங்குகங்கை நீர்வேய்ந்த புண்ணியா — சங்கையற
நானே யதுவென்று நாடிடவும் நின்கருணை 17
தானே துணையாகத் தா.

உன்னை யொழிய வொருவர்க் கொருசுகத்தைத்
துன்னக் கொடுப்பரோ தொல்லுலகில் — முன்னமறை
போற்றும் பரசிவனே போதவா னந்தமுறச் 18
சாற்றுந் திருவருளைத் தா.

ஈதே சிவவடிவம் ஈதே சுகவடிவம்
ஈதே யுனதுவடி வென்றாலும் — வேதமுதல்
சாற்றுசுக மாயிருக்கச் சந்ததமு முன்னருளை 19
யேற்றிடுவா யென்றனுளத் தே

எல்லாப் படியாலு மெண்ணினா லிவ்வுலகம்
எல்லா மெனதுவடி வன்றியில்லை — கல்லோலஞ்
சூழ்கடலிற் றோன்றுஞ் சுழிநுரைக ளானவெலாம்
ஆழ்கடனீ ரன்றியில்லை யால். 20

மண்ணையின்றிப் பாண்டமில்லை மாயையின்றி மோகமில்லை
கண்ணையின்றிக் காட்சியில்லை காசினியில் — எண்ணுங்கால்
தன்னையன்றிப் பந்தமில்லை சார்முத்தி தானுமில்லை
தன்னையறிந் தின்பமதே சார். 21

காணக் கருதக் கருத்தடங்கி நோக்கியிடப்
பேணப் பிடிக்கப் பிரியவிட — மானுலகில்
ஒன்றுமே யில்லை யுறுதியுட னின்சொருபம்
ஒன்றிடவே வோர்மையுடன் உன் 22

கருதார் புரமெரித்த கண்ணுதலே யென்றன்
கருதாப் புரமெரிக்கக் காணே — மருதூரா
ஆக்கையிலா மோக்க மடைவிக்க வுன்றனருள்
வாக்குமனம் ஆக்கையிலே வை 23

உள்ளமல மற்றவிடத் துற்றிடுங்கா ணற்சாக்ஷி
தெள்ளச் சுகமுதிக்கிற் றேகம்போம் — கள்ளமற
ஆத்துமத்தி னின்றே அனைத்துலகுந் தான்மறந்து
நீத்திடுவாய் பந்தமெலாம் நீ 24

சோற்றுப் பொதிமேற் சுமைதாங்கி மட்பாண்டங்
காற்றுத் துருத்தியிரு கன்மபுரி — நாற்றமிகும்
ஊனுடம்பை நானென்று வுன்னுதே யோரறிவே
தானென்று சந்ததமுஞ் சார் 25

பஞ்சமலம் பஞ்சமயல் பஞ்சதொழில் பஞ்சகர்த்தர்
பஞ்சபூத மானவெலாம் பாராதே — துஞ்சுமயல்
தூரத்தே நீயகற்றிச் சோபா திகமாற்றிப்
பாரத்தே நீயிருக்கப் பார். 26

பார்த்தவிட மெல்லாம் பரமன்தா னென்றுணரு
தீர்த்தமெலாந் தானென்று தீர்ந்துவிடு — கீர்த்திக்கும்
தோத்திரங்க ளெல்லாஞ் சுகரூப மென்றுகாண்
யாத்திரையு மான்மாவி லாம் 27

சித்தம் சிவமானூர் தேசங் திரிவரோ
வொத்தசிவம் நானென்று வுன்னூரோ—சுத்த
துறவிநா னென்று சுமடனுய்ச்சுற் ருதே
வுறவதாம் பாசமென வுன் 28

சாற்றுங் குருபதத்தைச் சார்ந்த துறவியர்கள்
காற்றை யனல்புனலைக் கார்மண்ணை—யேற்றமெனக்
கொண்டுதிரி வாரோ குவலயமெல் லாஞ்சுற்றி
விண்டுதிரி வாரோ விளம்பு 29

எத்தனையோ கோடி யிழுக்குயர்வாஞ் சென்மமதிற்
துய்த்த சம்ஸ்காரங் தோன்றிடுமேல்—அத்தனையுங்
தானந்து நிட்டையினிற் சாம்பராய் வெந்துவிடும்
ஞானந்தா னென்றுநிதம் நாடு 30

தீர்த்ததல மூர்த்திதனைச் சேவித்துப் பேறுபெற்ற
காத்திரர்க்கே மெஞ்ஞானங் காட்டுகிற்பார்–சோத்திரராய்ச்
சொல்பிரம நிட்டராய்த் தூயநெறி நேர்நின்ற
நல்பிரம சாரரை நீ நாடு 31

ஊழால் வரும்பலனை யொண்ணுமோ மாற்றுதற்குத்
தாழா துஞற்றுமவர் தாண்டிடுவர்—வீழா
நெடுங்கால மான்மாவில் நேயமுட னின்ருல்
படுங்கன்ம மத்தனையும் பாழ் 32

தத்துவங்கள் கற்றுத் தலைநடுக்கங் கொள்ளாதே
தத்துவசா லங்களெல்லாந் தள்ளியே—சுத்த
அகம்பிரம மென்றுதின மாராய்ந்து பார்த்துச்
சுகந்தனிலே யெப்போதுங் தோய் 33

பாலும் பழரசமும் பாயசமுங் தான்புசித்துத்
தோலு மெலும்புமாய்த் தூங்குவதேன்—மேலுணர்வு
கூடிச் சுகமடையக் கூறின நம்குரவர்
காடிகூழ் வுண்டிருக்கக் கண்டு 34

பாலும் பழமுடனே பச்சிலையுங் தான்புசித்துக்
காலு மடக்கியுடற் கட்டுவார்—மேலுணர்வு
கண்ட குருவடையார் காணுக் குருவடைந்து
உண்டுறங்கிச் சாகு முவர் 35

முற்றத் துறந்த முனிவரரு நல்லுணர்வு
பெற்றுச் சிறந்த பிராமணரும் — குற்றமற
வந்த தருந்திடுவார் வாரா தனவிரும்பார்
சந்ததமுந் தன்னையறிந் தார். 36

பாலுண் டிறந்தாலும் பாடிச் சிறந்தாலும்
காலுண்டு தேய்ந்தாலும் காணவொண்ணு — மால்விண்டு
அஞ்ஞான மாய்த்து அறிவையறி வாலறிந்தால்
மெஞ்ஞான தத்துவமா மே. 37

சிருட்டிமுன் றேன்றிடுமேற் சிர்சத்தை மூன்றுந்
திருட்டியேற் சத்திரண்டாய்ச் செப்பு — திருட்டி
சகமாய் விளங்குமெனிற் சத்தொன்றே யன்றிப்
பகமாய் விளம்புவதென் பார். 38

சத்தேசித் தாகும் சகமும் அதுவாகும்
பித்தெல்லாம் விண்டு பிரிவகன்று — சித்தமதில்
தன்னுருவம் சாக்ஷியென்றும் சாக்ஷி யதுவென்றும்
பின்னமறக் கண்டவனைப் பேண். 39

சொப்பனமுஞ் சாக்கிரமுந் துல்லியமாய்த் தோற்றுமெனின்
அப்பொழுதே யாசையெலா மற்றவனாய் — இப்பிறவி
நீங்கிச் சுகமடைந்து நித்தியமாந் தத்துவத்தில்
தூங்கி யிருப்பனெனச் சொல். 40

கண்ட வுலகமதைக் காணு துறைதவர்கள்
விண்டிருக்க நெஞ்சில் விழைவுறுர் — கொண்ட
மனையாளுந் தெய்வமெனக் கொண்டுறையும் மாண்போர்
எனையாளுஞ் சற்குரவ ரே. 41

பொய்யுலகை மெய்ம்மையெனும் போதமிலா நெஞ்சுடையார்
செய்தவமுங் கைதவமே சேர்துறவும் — பொய்வடிவே
நிட்டையும் நட்டமதே நெஞ்சகமும் வஞ்சகமே
கட்டையே புத்தியுமே காண். 42

தஞ்சமென்று சொல்லிச் சரண்புகுந்த மாணவனை
எஞ்சலிலாச் சற்குருவு மேற்றிடுவார் — நெஞ்சதனில்
கற்றுரு வுருகுதல்போற் காதலிக்குஞ் சற்சிடன்
உற்றுன் பயனனைத்து முள். 43

உள்ளத் திருந்து மொளிர்ந்த பரசிவனைத்
தெள்ளத் தெளிவித்த தேசிகனைக் — கள்ள
வுடல்போ மளவும் உருகிப் புகழ்ந்து 44
திடமாவான் சற்சீடன் தேர்.

எங்குஞ் சிவமொழிய வில்லையென்றார் சற்குரவர்
அங்கிங் கெனாது அகண்டமென்றார்—துங்க
வுணர்வே யலாது வுலகமில்லை யென்றார் 45
உணர்வா யதுநானென் றுள்.

மித்தையதா யிவ்வுலகம் வேண்டியநாள் தோன்றிடுக
அத்துணையால் ஞானிதனக் கானியென்ன சித்தம்
சிவமாக நின்று செகத்தை மறந்த 46
தவரே மகானெனச் சார்

உன்ன லொருபங் குரைத்த லிருபங்கு
துன்னுதல் மூன்றுபங்காய்ச் சொற்றிடுவர்—இன்னவகை
புண்ணியமும் பாவமுமாய்ப் பூதலத்தோர் செய்கையதாம் 47
கண்ணியமாய்க் கொள்வதெதைக் காண்.

மதித்தாற் பெரியர் மகிதலத்தோர் நிந்தை
விதித்தாற் சிறியரென விள்ளல் - மிதித்தேறி
யீயுந் தலையின்மே லெச்சமிடல் கண்டதவர் 48
காயுமோ கீழிகழைக் கண்டு.

செத்துச் சவமாகுஞ் சீயென்னும் நாயுடலை
வைத்து மகிழும் மகிதலத்தோர்—சுத்த
துறவிகள் நாளுந் துயருடம்பைத் துச்சில் 49
உறவாகா தென்றுவக்கா ருள்.

எள்ளுற்ற விச்சகத்தை யொப்போது மெள்ளிடுவாய்
நள்ளுற்ற நற்பிரமம் நாடிடுவாய்—கள்ளப்
புலக்குரம்பை கட்டிழிக்கப் புண்ணியனே யெண்ணு
நிலக்குறிய நீள்புலவ னீ 50

பாடிப் படித்துப் பரஞானஞ் சேராக்காற்
பேடித் தனத்திற் பெரியதனம்—கூடிநிதம்
கொஞ்சிக் குலாவிக் குடிகெட்ட பெண்டுகளைக்
கெஞ்சித் திரிவிதிலுங் கீழ் 51

வேத முடிவும் மிகுஞான சாரமுமே
வோதி யுணர்ந்தும் உணர்விலரேல்—சாதி
குலங்கெட்ட மூடரெனக் கோதான வுள்ளப்
பலங்கெட்ட பாவியெனப் பார் 52

பாடப் படிக்கப் பரலோகஞ் சேவிக்கத்
தேடச் சுகிக்கச் செலவழிக்க—நாடகமாய்ப்
பேசத் தெரிந்தும் பிராண னறிவிலரேல்
நீசத் துரோகியென நீக்கு 53

புலாலை மறுக்காமற் போதங்கள் பேசுஞ்
சொலாலே பிதற்றுஞ் சுமடர்—பலகாலே
ஆடிநீர் தோய்ந்தும் அகிலதல மூர்த்திகண்டும்
தேடித் திரிந்துமென்ன செப்பு 54

உண்ணுடும் யோகத்தா லோர்பொருளைக் காணுமல்
உண்ணு வுடுத்தா வுறங்கியெழா—எண்ணுமல்
வாணுளை வீண்கழிக்கும் மானுடரைக் கண்டக்கால்
நாணுரோ மெய்கண்டார் நாடு 55

அவித்தையை வித்தையா லற்றிடவே செய்தால்
புவித்தான மீதுயர்ந்த பூமான்—சவிஸ்தார
மாகவே வாழ்ந்த மகாபோகி யோகினி
சாகைநால் வேதமிதே சார் 56

தாடி வளர்த்தும் சடைமுடிகள் தான்தரித்தும்
பீடி குடித்தும் பெறுவதென்ன—நாடியொரு
வேத மொழிபகரும் மெஞ்ஞான தேசிகரின்
பாதமலர் சேவிக்கப் பார். 57

வெள்ளமாய்ப் பேசலாம் வேண்டுவவெ லாம்செயலாம்
உள்ள மடக்கமட்டு மொண்ணுது—கள்ள
மனமாயை தானீத்த மாசற் குருதாள்
தனமாகப் போற்று தவர். 58

என்றைக் கிருந்தாலு மிந்தவுடம் பந்தரமே
பொன்று முடல்மயலைப் போக்கிவிடு—நன்றுநீ
சற்சிற் சுகவடிவைத் தானென்று தன்னுளத்தே
நிற்கிற் பதுவே நிலை. 59

காயம் அசையாமற் கற்போ லிருந்துமென்ன
வாயும் பதையாமல் வைத்துமென்ன—நேயம்
அறைக்கணமு நெஞ்சகத்தை யான்மாவில் வையாத்
தரைக்கணிலே வாழுந் தவர். 60

ஆறுகோடி சத்திரங்க ளாகமங்கள் கற்றாலும்
நூறுகோடி சித்திபெற நோற்றாலும்—பேறில்லை
நித்தியமாய் நிர்க்குணமாய் நின்மலமாந் தத்துவத்தில்
அத்துவித மாகா தவர். 61

சங்கற்ப சாலத்தைத் தள்ளாதே தத்துவத்தை
யிங்கற்பம் நெஞ்சகத்தி லெண்ணுதே — துங்கப்
பரப்பிரம ரூப பரகுருவைப் பார்த்தாற்
திரப்படுமே ஞான சிவம். 62

குருவே பிரமாவாம் கோவிந்த னுகும்
குருவே யுரையிறந்த கோவாம்–குருதானே
எல்லாமு மாகுமெனும் எண்ணம் முடையோனே
வல்லாள னுகு மதி. 63

எல்லாஞ் சிவன்செயலென் றெண்ண முதிக்குமேல்
எல்லாமுந் தன்செயலென் றெண்ணுதல்போம்–எல்லாமும்
ஆக்கினுன் காப்பா னழிப்பா னதுவன்றிப்
பாக்கியுனக் கென்னிருக்கு பார். 64

கற்றவரே யானுலும் கல்வியில்லா ரானுலும்
குற்றங் கருதார் குணமுடையோர்—குற்றமே
கொண்டுபா ராட்டுங் குணங்கெட்ட நிர்மூடர்
கண்டிடுமோ நல்லோர் களை. 65

கர்மத்தாற் சுத்தியுறுங் காரணநற் கர்மிசெயுந்
தர்மத்தாற் பக்திமிகச் சார்ந்திடுமே—கர்மதர்மர்
ஞானத்தால் முத்தியினை நாடிடுவர் நல்லசோ
பானமே யிந்தமுறை பார். 66

சித்தஞ் சிவமயமாய்ச் சேர்ந்த பெரியோர்கள்
முத்த ரெனமொழிவர் மூதறிஞர்—மெத்தப்
பகிர்முகமாய்ப் பார்க்கின்ற பார்வை விடுத்து
அகமுகமாய் நோக்கினது வாம். 67

அத்தமுஞ் சிப்புமே யத்தமதிற் கொண்டுநீ
சித்தரிப்பாய் கேசமுகஞ் சிவியே—சத்தியமாம்
ஈசனே நோக்கிலே யேத்திலே போற்றிலே
தோஷியுனே யன்றியுண்டோ சொல். 68

ஆசையே கூற்றுவனும் ஆசையே சத்துருவாம்
ஆசையே பாசத்துக் கன்னேயுமாம்—ஆசையே
அக்கிரம வித்தாகும் ஆபத்துக் காப்தனுமாம்
துக்கத்துக் காஸ்பதமாய்ச் சொல். 69

நிராசையே தெய்வமாம் நீதியுள்ள நண்பாம்
நிராசையே சற்குருவாய் நேரும்—நிராசையே
தானந் தவமாகுஞ் சாதுசங்கந் தானுகுந்
ஆனந்த ஆஸ்பதமு மாம். 70

ஆசையெனுஞ் சொல்லினது அர்த்தத்தை யாயுங்கால்
பாசம் பசுபதியைப் பாராமை—பாசம்
பதியை யறிந்து பசுபதிதா னுயின்
மதியாசை தீர்ந்ததில் மன். 71

தீரத் துறந்த துறவியரே செவ்வியதாம்
பாரத்தைச் சேரும் பரஞானர் தீரமுடன்
நெஞ்சத்தை வென்ற நிருபர் சுயராஜ்யம்
விஞ்சத்தா னுண்டவராம் விள். 72

ஆகந்தா னென்னு மறிவுடையோ னஞ்ஞானி
சோகமெலா மன்னவனே தூக்கிடுவான்—போகமொடு
போக்தாவும் போக்கியமும் தானென்பான் போதமிலா
ஆக்கையாய்த் தானிறப்பா னும் 73

ஏகம் பிரமம் இருமை யொருமையிலே
போகம் புவனம் பொறிபுலன்கள்—சோகமயல்
துய்ப்பவனுந் தானல்லன் சொல்குணு தீதனுய்
நிற்பவனே ஞானியென நேர். 74

ஆகமே ஞானிக் கடுத்த பகையாகும்
ஏகமே வாத்துவித மென்னுமனு—போகமே
மோனியர்க்கு நல்ல முடிவான நண்பாகும்
தானிகராந் தன்மையவர் தான் 75

சாந்த முடைய தவசிகள்தன் சித்தத்தே
சேர்ந்த வுணர்வே திகழ்ந்திடுமாம்—ஆய்ந்திங்
கவாவறுத்த யோகியர்தம் அந்தக் கரணம்
தவாச்சுகமாய்ச் சாந்திபெறுந் தான் 76

மண்ணுலக வாஞ்சையும் மாதுமய லானதுவும்
விண்ணுலக போகமதும் விட்டவர்கள்—திண்ணமாய்
நானெனும் போதம் நழுவிச் சிவமாவர்
ஈனபிறப் பெய்தா ரிவர் 77

ஆட்டுவிப் பானும் அறங்கள் பலசெய்ய
மூட்டுவிப் பானும் முழுப்பயனை — யூட்டுவித்து
இன்பப் புணரி யெழில்ஞான பானுவாய்
நன்மையெலாஞ் செய்பவனை நாடு. 78

கருவுற்ற நாண்முதலா யுன்பாதங் காண
யுருகி யுருகியுளம் நைந்தேன் — மருவுற்ற
கொன்றை யணிந்தோய் குருரூப மாய்வந்தும்
நன்றுதெளி கில்லேன் நயந்து. 79

என்னை எனக்களித்த என்குருவே யுன்பாதம்
தன்னை யடைந்தவன்றே தன்னியனுன் — என்னினுமே
பாச வொழிவும் பசுபோத நாசமுமே
யீசனே யெற்கருள வெண். 80

சிந்தைக் கினிதாஞ் செவிக்கினிதாம் வாய்க்கினிதாம்
பந்தப் பனிக்குப் பரிதியாம் — சந்ததமும்
ஆங்கார மற்ற அதீத சுகமதனில்
தூங்கியே சும்மா விரு. 81

சிந்தை யடக்கிச் செகவா சனையொடுக்கிப்
பந்தப் பிணியதனைப் பற்றறுத்து — மூந்தை
வினைவயத்தை நாடி வெறிதிருக்கும் ஞானி
தனையுலகு போற்றிடுமே தான். 82

பந்தப் பிணியைப் பறித்தறவே தள்ளாராய்ச்
சிந்தை யடக்கஞ் சிறிதிலரர்ய் — வந்தனைசெய்
சாதுநா னென்று சகலமுந் தின்றுநின்றுற்
போதுமோ ஞானமெனும் பூண். 83

காதல்கோ பங்கடந்த காருண்ய மூர்த்தியுமாய்
ஓத அுருக வொழிவிலராய்ச் — சாதல்
பிறப்பினுக் கஞ்சும் பெருமை யுடையோர்
சிறப்புடைய சாதுவெனத் தேர். 84

தேட்டமுறு கேட்டல் மனனந் தெளிதலுடன்
வாட்டமறு நிட்டைதின மன்னிடுவோர்—நாட்டமுடன்
ஞானமே கைவந்த நற்பிரம சாரரே
மோனநிலை கைவந்தோர் முன். 85

விராக முபரதி விஞ்ஞானம் மூன்றும்
பராவதி யுற்றவரே பார்மேல்—நிராகார
நித்திய முத்தர் நிஜரூப மாய்நின்றோர்
சத்திய சற்குரவர் சார். 86

உருவ மனநாச மோர்சிவன் முத்தர்க்
கருவம் விதேகர்க் கணுகும் — சொருபமாய்
எத்தத்து வத்திலுமே இன்புப்பு வற்றவனுய்ச்
சுத்தத் விதத்திற் சுகி. 87

சச்சிதா னந்தத் தனிப்பொருளாம் வத்துவெது
இச்சித் தவர்க்கு இனிப்பதுவாய்ப்—பொச்சமற
நின்றூர்க்கு நின்ற பொருளதுவாய் நிர்க்குணமா
யொன்றுகி நிற்குமது உன். 88

பெற்ற பெரியதெலாம் பேசுற்ற சின்னதுவாய்
உற்ற சிறியதெலா மோர்பெரிதாய்—உற்றதெது
ஆணமுதற் தம்பமீ ருயபொரு ளத்தணைக்கும்
தானறிவாந் தத்துவமே தான். 89

மூலத்தை நோக்காதே முத்தாபம் நீக்காதே
காலத்தை வீணுய்க் கழிக்கின்றுய் — தூலத்தைக்
காலனுர் வந்து கசக்கிப் பிழிந்திடுநாள்
ஏலநீ யென்சொல்வை யே. 90

தோற்றுசக பேதமெலாம் துன்பமய மாஞலும்
வேற்றுமையாய்த் தோற்றிடினும் விந்தையென்ன
தோற்றரவாம்
இந்திரசா லச்சகத்து எந்தவித மாஞலும்
மந்திரனுக் குண்டோ மயல். 91

நாடகத்தி லாடுகின்ற நாட்டியர்க்கு மத்தளர்க்கும்
கூடுங் குணங்குற்றங் கூடிடுமோ—ஆடரங்கை
முன்பின் விளக்கொளிபோல் முற்றுடலந் தக்கரண
கன்மமான் மாவையணு கா. 92

பெண்டாட்டி பிள்ளை பெருவாழ் விதுவெனவே
திண்டாடி நாளுந் திரிகின்றூர்—பண்டை
வினையையும் வெல்லார் வினயமாய்க் கல்லார்
தினையுமே நன்மை செயார் தேர். 93

ஜனகர் முதலோர் சமுசாரத் துற்றும்
மனமாயை பந்தமதில் வையார்—வினையனைத்தும்
மந்திரியை யாதியாம் மக்களிடத் தொப்புவித்துத்
தந்திரமாய் ஞானமடைந் தார். 94

ஞான சனகனே நானென்று நாடுசிலர்
மோனமு ஞானமு முற்றுமுறூர்—ஆன
மனைமக்கள் வாழ்வுதன மாயையிலே சிக்கி
வினைமான முற்றுவிடு வார். 95

கோபித் திருந்தாலுங் குற்றமே செய்தாலும்
சீவித் திருந்தாலுஞ் சீயெனவே—மேவித்
திரிந்தாலும் இல்லந் துறந்தோர் சிறந்தோர்
பெரியோர் புகன்றமொழி பேண். 96

உன்னை யுணர்வுருவா யுற்றுணர்ந்தா யாமாகில்
என்னையு முன்னுருவா யேலென்றூர்—முன்னை
மனமாயை நீக்கி மலமோகம் போக்கித்
தனையீய வந்தகுரு தான். 97

வித்தை யவித்தை விதிவிலக்கு எல்லாம்பொய்
தத்துவசா லங்களெல்லாந் தள்ளியே—சுத்த
சுகசொருபந் தானென்னுஞ் சுத்தநிலை நின்று
சகஜநிட்டை சந்ததமுஞ் சார். 98

சுத்த சொருபத்தைச் சூக்குமமாய்த் தேர்விலரேல்
அத்துவித நூல்பலவு மாய்ந்துமென்ன—நித்தஞ்
சிவானந்தத் தேனைச் சிறிதளவு வுண்டாற்
பவானந்தம் பாழ்படுமே பார் 99

ஓடித் திரிந்தாலு மூரூராய்ச் சுற்றிநிதஞ்
தேடித் திரிந்தாலுஞ் சிக்காது—நாடியுள்ளே
தானே விசாரித்துத் தத்துவங்கள் தள்ளியொரு
தானகக் காணுசிவந் தான் 100

இருதயத் துள்ளிருக்கு மேகம்ப நாதன்
தெருவுதனிற் தேடினெங்கே சிக்கும்—குருவால்
அதுநீயே யென்று அருள்மகா வாக்கால்
அதுநானென் றுள்ளொளிரு மாம். 101

ஏகம் பிரமம் இரண்டிலைநாம் வேறுமிலை
சோகமுறும் பேதமின்பந் தோன்றவொட்டா—பாகமாய்
நானே யதுவென்னும் நாட்டமே வந்துவிடில்
தானன வின்பந் தரும் 102

என்றுஞ் சிவம்நாமே யின்றுதா னென்றுணரேல்
குன்றவில்லி நால்வருக்காய் குந்தியிருந்—தன்ருவில்
சொன்ன பொருளுந் துணிவுடைய நற்பொருளும்
இன்னபொரு ளென்றே யிரு 103

காகதா லீயம்போற் கர்த்தன் குருவடிவா
யாக மெடுத்து அருளுவனேல்—தேகமயல்
தூரப்போ யானந்த சாகரந் தோன்றுமப்போ
தாரப் புசித்தே அமர் 104

சாத்திரங்கள் கற்றுநீ சந்தேகங் கொள்ளாதே
கோத்திரங்கள் கூறிக் குலையாதே—சாத்திகமாய்
உன்னுதே யோடாதே யோரிடமே தான்பற்றி
என்னுணை சும்மா யிரு 105

சும்மா விருக்குஞ் சுகமே பெரியசுகம்
அம்மால் விரிஞ்சன் அபிமதமாம்—பொய்மா
மனமாயை நீத்து மகத்தான வாழ்வில்
வினவா திருந்து விடு. 106

அந்தக் கரணம் அலைபோ லசைந்திடினும்
தொந்தச் சுகாசுகங்கள் தோன்றிடினு—மெந்தனது
ஆன்ம சமுத்திரத்தி னம்சமே யென்றுநிதம்
பான்மையா யித்தனையும் பார். 107

கல்லாக் கழிப்பர் அறிஞர் கயவர்நாள்
பொல்லாப்புன் போகத்தாற் போக்கிடுவர்—நல்லோர்கள்

ஞானத்தால் நாட்கழிப்பர் நற்சிவன் முத்தரவர்
மோனத்தாற் போக்கிடும்நாள் முன். 108

ஈச னருளுடையார் எல்லாம் பெறவுரியர்
தேச னருள்பெற்றுற் சென்மம்போம்—நேசமுடன்
அஞ்செழுத்தை நெஞ்சதனில் அந்திபகல் சிந்தனைசெய்
எஞ்சலின்றி யின்புதிக்கு மே. 109

காமியநிட் காமியமாய்க் கர்மம் புரிந்தவர்க்கே
நேமமாய்ப் பக்தி நிலைத்திடுமாம்—சேமமாய்
ஞானமு மின்பமும் நன்றாய்த் திகழ்ந்திடுமாம்
ஞானநெறி யீதெனவே நாடு. 110

சொல்கரும காண்டிதனைத் தொண்டனென்ப னீசர்க்கு
நல்லதர்மி யன்பனென நாடிடுவன்—வல்லபக்தன்
பாலனு னென்றிடுவன் பார்புகலும் ஞானவான்
ஏலநான் தானென்ப னே. 111

அநித்தியத்தை நித்தியமென் றுங்காரங் கொள்ளேல்
தனித்திருந்து ஞானத்தைச் சாரு—மனித்திரிந்து
மாடுமனை வீடுசுற்றம் மக்களுக்கா கப்பொருள்தான்
தேடிநாள் வீணுக்கா தே. 112

சத்தப் பிராந்தி சகமாம் பிராந்தியெலாம்
சித்தப் பிராந்தியெனத் தேறிடுவாய்—நித்தம்
அகம்பிரம மென்று அனுட்டித்து நிற்பாய்
சுகந்தனிலே தோன்றும் சுகி 113

தாயிற் சிறந்த தயவுடைய சற்குருவை
நீயற் பமும்விட்டு நீங்காதே—தூய
மலர்தூவிக் கால்போற்றி ம்ன்னிநிற்பா யாயின்
நிலமதிலே நீள்புகழோ னீ 114

நல்ல பெரியோர்கள் நாளுங் குருவருளால்
எல்லாப் பயனுமே யெய்தினரால்—வல்ல
மனமா சகற்றும் மகத்துவரை நாளுந்
தனமெனவே கொண்டுநீ சார் 115

தர்க்க மிலக்கணஞ் சாகித்யஞ் சோதிடம்
கொக்குவம் நாடகம் கோப்பியம் — பக்குவம்
தந்திரம் மந்திரம் சாலங்கள் செய்தாலும்
சந்ததம் ஆன்மநிலை சார் 116

மனிதனுய்த் தோன்றி மனைமக்கள் பெற்றுச்
சினிமாவும் பார்த்துநீ திர்ந்தாய்—கனிவாத

பித்த சிலேத்துமங்கள் பேதித்த நாள்வருமோர் 117
கத்தனுக்கென் கூறுவையோ காண்

சாற்றுங் குருவருளைச் சந்ததமும் சார்ந்திலையேல்
கூற்றன் கயிற்றிற் குலைந்திடுவாய்—தூற்றும்
பதர்தனிலே சுத்தப் பதருநீ யாக்கம் 118
விதரணையு மற்றலைவாய் வீண்

குருவருளைத் தெய்வமெனக் கொண்டுறையு மாணுன்
குருவருளை யன்றியொன்றுங் கொள்ளான்—குருவருளே
சுத்தியும் புத்தியும் சொல்சிவன் முத்தியுமாம் 119
சித்தியும் சத்தியமே தேர்

கோடையினி லாறுதனிற் கொண்டாட்ட மாடினவர்
வாடைமழைக் கென்னமாய் வாழ்ந்திடுவர் — நாடுதவம்
ஆற்றுநா ளெல்லா மவமே கழித்தவர்கள் 120
கூற்றுவந்தா லென்னுரைப்பர் கூறு.

ஆர்கருமி மூக்ஷப்பி யாசி யனுபவிக்கு
வோர்நூறு மூன்றிரண்டு வொன்ருகும்—சேர்பிறவி
முத்தனுக் கிப்பிறப்பில் முத்தியுறும் மோகமறுப் 121
பெத்தனுக் கெத்தனையோ பின்.

முன்மூன்று பூமியுளோர் முத்திபெறக் கற்பவராம்
பின்மூன்றோர் சிவமுத்தி பெற்றவராம்—சொன்னநடுப்
பூமிதனைப் பெற்றவரே பூமவித்தை தந்திடுவர் 122
சேமமாய்த் தொண்டவர்க்குச் செய்.

கற்கவுங் கேட்கவுநான் கற்றபடி நிற்கவுமே
நற்கருணை சங்கரனே நல்கிடுவாய்—சற்குருவாய்
இங்குநீ யுற்றிடவு மென்றனுள மின்புருவாய்த் 123
தங்கிடவு நின்னருளைத் தா.

தேடித் திரிந்துபுகழ் செல்லப்ப தேசிகர்தாள்
சூடிச் சிறந்த சுகசிவந்தான்—பாடிநிதம்
ஞானஞ் சிறக்கவுரை நல்லவனு பூதிநீ 124
வானமண் ணுள்ளளவும் வாழ்.

தாயுமாய்த் தந்தையுமாய்ச் சற்குருவாய்ச் சார்ந்தொரு 125
தூய செல்லப்பரருள் தோய்

திருச்சிற்றம்பலம்

அனுபூதி மாலை முற்றும்

121. முமூக்ஷ். எனற்பாலது. மூக்ஷ் என்று தலைக்குறையாக.
தளைதட்டாது வந்தது.

# பிழைத் திருத்தம்

| பக்கம் | பாரா | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 12 | 2 | 2 | கழித்தர்ர் | கழித்தார் |
| 13 | 1 | 1 | பலவளத் | பல்வளத் |
| | 2 | 2 | சுவாமிகளைங் | சுவாமிகளைக் |
| | | 4 | செலவர் | செல்வர் |
| | பாட்டு | | | |
| 18 | | 12 | சிலநன் | சிவநன் |
| 19 | 1 | 3 | குடியிப்பாய் | குடியிருப்பாய் |
| 20 | 6 | 3 | கூறிய | கூரிய |
| | 8 | 4 | வென்றே | வன்றே |
| 24 | 12 | 1 | இத்தகைக் | இத்தகைச் |
| 29 | 34 | 1 | தேவர் | தேவா |
| 30 | 39 | 4 | சத்தன | சந்தன |
| | 41 | 3 | மளித்த | மளித்து |
| 31 | 42 | 4 | நூல் பல | நூல் பல கூற |
| | 46 | 2 | தஞ்சைப்பால்ச் | தஞ்சைபால்ச் |
| 38 | 74 | 4 | காலமுன் | காலமூன் |
| 39 | 80 | 4 | காண்டரு | காண்டகு |
| 43 | 98 | 4 | வேதியா | வேதியர் |
| 44 | 102 | 8 | செல்வப்பா | செல்லப்பர் |
| 45 | 107 | 2 | நற்றகர் | நற்றவர் |
| 48 | 126 | 4 | பத்ம்பா | பத்மபா |
| 55 | டிப்பணம் | 2 | சுரோத்திரியம் | சுரோத்திரியப் |
| 56 | 13 | 6 | நீள்பேர் | நீள்போ |
| 60 | 5 | 8 | எழுந்தருளாளே | எழுந்தருளாயே |
| | 7 | 1 | ஐந்ததையும் | ஐந்தையும் |
| 63 | 8 | 2 | முடிவெதுவேர் | முடிவெதுவோ |
| 74 | 28 | 2 | பாதம | பாதம் |

| பாகம், | பாட்டு. | வரி. | | |
|---|---|---|---|---|
| 77 | 38 | 4 | சற்ருருவே | சற்குருவே |
| | 39 | 4 | வகுளை | வருளை |
| 78 | 40 | 2 | நர்யினுங் | நாயினுங் |
| 79 | 2 | 3 | மெய்க்குனே | மெய்க்குகனே |
| 81 | 7 | 6 | றுரைதது | றுரைத்து |
| 83 | 15 | 4 | சித்த்ரைக் | சித்தரைக் |
| | 16 | 2 | போற்ற | போற் |
| | 18 | 3 | வியல்பெ | வியல்பை |
| 84 | 21 | 3 | மளித் | மழித் |
| | 23 | 1 | கதியுமகி | கதியுமாகி |
| 86 | டிப்பணம். | 3 | அழுகிது | அழகிது |
| 87 | 38 | 3 | சாற்றிடுந | சாற்றிடுங் |
| 90 | 51 | 1 | வெண்ண | யெண்ண |
| 106 | 122 | 2 | சிவமுத்தி | சிவன்முத்தி |

